# அம்புலிமாமா

மே – 1978

# அம்புலிமாமா

நிறுவனர்: 'சக்கரபாணி'
நிர்வாக ஆசிரியர்: நாகிரெட்டி

நல்ல குழந்தைகளை அடைந்தால் அது அந்தக் குடும் பத்திற்குப் பெரும் புகழையே தேடிக் கொடுக்கும். எவ்வித துன்பமும் நேராது. இந்தப் பிறப்பில் மட்டு மல்லாமல் தொடர்ந்து ஏழு பிறப்புகளிலும் நன்மையே இத்தகைய மக்கட் பேருல் கிடைக்கும் என வள்ளுவர் கூறுகிறார்.

"எழு பிறப்பும் தீயவை தீண்டா பழி பிறங்காப்
பண்புடை மக்கட் பெறின்"

என்ற குறளால் நமக்கு தமிழ் முனிவர் அறிவுறுத்து வதை மனதில் கொள்வோம். நற்பண்புடைய மக்கள் ஒருவனுக்குப் பிறந்து விட்டால் அவனுக்கு மகிழ்ச்சி யும் இன்பமுமே கிட்டும். துன்பமும் துயரமும் எப் போதும் ஏழேழு ஜென்மத்திலும் அணுகாது என்பதே இதன் கருத்து.

மதிமுகம்: 62 மே '78 புன்னகை: 5

தனிப் பிரதி ரூ. 1—25 வருட சந்தா ரூ. 15—00




CHITRA




*சுகதுக்கே பயக்ரோதௌ*
*லாபாலாபௌ, பவாபவௌ*
*யச்ச கிஞ்சித் ததா பூதம்*
*நநுதைவஸ்ய கர்மதத்*

[காரணம் எதுவும் இல்லாமல் சுகமோ துக்கமோ, பயமோ, கோபமோ, லாபமோ நஷ்டமோ பிறப்பு என்பன ஏற்பட்டால் அவை கடவுள் செயலால் தான் ஏற்பட்டன]

*ரிஷியோப்யுக்ர தபஸா*
*தைவேனாபிப்ரபீடிதாஹ*
*உத்சிருஜ்ய நியமாம் ஸ்தீவ்ரான்*
*ப்ரயஷ்யஸ்தே காமமுன்யபிஹி*

[மிகக் கடும் தவம் புரியும் முனிவர்கள் கூட கடவுளின் செயலால்தான் தம் தவக் கட்டுப்பாடு கூட மறந்து காமவசப் பட்டு இழிவடைகிறார்கள்]

*அசங்கல்பிதமேவேஹா*
*யதசஸ்தாத் பிரவர்த்ததே*
*நிவர்த்யாரம்பமாரப்தம்*
*நனு தைவஸ்ய கர்மதத்*

[மும்முரமாக ஆரம்பிக்கப்பட்ட வேலை நின்று விட திடீரென நாம் நினைத்தும் பாராத ஒரு வேலை ஆரம்பமாவது கடவுளின் செயலே ஆகும்]

கடவுள் செயல்




அரிமர்த்தனும் அவனது நான்கு மந்திரிகளும் தன்னை நம்பி விட்டதை ஸ்திரஜீவி கண்டது. ரக்தாட்சி ஆட்சேபித்தும் அவை அந்தக் காகத்தைத் தம் குகைக்கு அழைத்துச் சென்றன.

அரிமர்த்தனன் தன் ஆட்களிடம் ''ஸ்திரஜீவி நம் நன்மையை விரும்புபவர். எனவே நம் கோட்டையில் எங்கு வசிக்க விரும்புகிறதோ அங்கே வசிக்கட்டும்'' என்றது. இதைக் கேட்ட ஸ்திரஜீவி தன் மனதில் எண்ணமிடலாயிற்று.

நான் இவர்களை ஒழிக்கப் பெரிய திட்டம் போட வேண்டும். எனவே கோட்டை மத்தியில் இருப்பதை விட அதன் வாயில் புறத்தில் இருப்பதே நல்லது. மத்தியில் இருந்தால் ரக்தாட்சியும் அதன் ஆட்களும் என்னைக் கண்காணித்துக் கொண்டே இருப்பார்கள். கோட்டைக்குள் வருவோரும் போவரும் கோட்டை வாசலில் வசிக்கும் என்னை அவ்வளவாக கவனிக்க மாட்டார்கள்.

இவ்வாறு எண்ணி அது அரிமர்த்தனனிடம் ''மகாராஜா, உங்கள் மனம் தாராளமானது. நான் இங்கே ஒரு மூலையில் முடங்கிக் கிடக்கிறேன். தினமும் வந்து தங்களைக் கண்டு போகிறேன். இது போதும் எனக்கு'' என்றது.

ஸ்திரஜீவியின் அடக்கத்தைக் கண்டு அரிமர்த்தனன் மகிழ்ந்து போய் அது விரும்பியபடியே கோட்டை வாசலுக்கருகே வசிக்க அனுமதித்தது. அதற்கு நல்ல உணவு கிடைத்தும் வந்ததால் அது நன்கு வளர்ந்து கொழுகொழுவென்று ஆகி விட்டது. ரக்தாட்சியோ அரிமர்த்தனனி

டம் ''உங்களது செய்கை தங்கத்தை தினமும் கொடுத்த பறவையை விட்டு விட்ட அரசனையும் அவனது மந்திரிகளையும்தான் ...ரவுபடுத்துகிறது. அவர்களைப் ...பால அறிவை இழந்து விட வேண்டாம்'' என்றது.

அரிமர்த்தனனும் அவனது மந்...ளும் ''அதென்ன கதை? ...ால்'' எனவே ரக்தாட்சியும் ...தை சொல்லிற்று,

ஒரு மலைச்சாரலில் ஒரு பறவை வசித்து வந்தது. அது மலம் கழிக்க அந்த மலம் தங்கக் கட்டிகளாக இருந்தது. ஒரு வேடன் இந்த அதிசயத்தைக் கண்டு வலை விரித்து அந்தப் பறவையைப் பிடித்தான். அதை தன் நாட்டு அரசனிடம் கொண்டு போய் ''அரசே, இது தங்கக்கட்டிகளை மலமாகக் கழிக்கிறது. இதை நான் தங்களுக்குக் கொடுக்கிறேன்'' என்றான்.

அரசன் தன் மந்திரிகளைப் பார்த்து ''இதென்ன அதிசயம்?'' என்றான். மந்திரிகளோ ''இது நம்பத்தக்கதல்ல'' என்று கூறி அந்தப் பறவையை விட்டு விடச் சொன்னார்கள். அரசனும் அவ்வாறே செய்தான். அதிசயப் பறவையையும் இழந்தான்.

இதைக் கூறியும் அரிமர்த்தனன் மனது மாறவில்லை. எனவே ரக்தாட்சி தன் ஆட்களிடம் ''இந்த நாடே பாழாகப் போகிறது. இவர்களை என்னால் காப்பாற்ற



முடியவில்லை. நாம் இக்கோட்டையை விட்டுப் போக வேண்டியதே. எதிரி ஒரு நாளும் நண்பனாக மாறமாட்டான். குகை பேசும் கதையைக் கேட்டதில்லையா?'' என்றது.

அவை அந்தக் கதையைக் கூறும்படி சொல்ல ரக்தாட்சியும் ''ஒரு காட்டில் ஒரு சிங்கம் இருந்தது. அதற்கு வெகு நாட்களாக எந்தப் பிராணியும் உணவாகக் கிடைக்கவில்லை. அது ஒரு குகையைக் கண்டு அதற்குள் போய் படுத்துக் கொண்டு ஏதாவது மிருகம் உள்ளே வருமா என்று எதிர் பார்த்து இருந்தது'' என்று சொல்லி கதையைத் தொடர்ந்தது.

அக்குகையில் வசிக்கும் நரி சற்று நேரத்திற்கெல்லாம் வந்தது. சிங்கத்தின் அடிச்சுவடுகள் உள்ளே போவது கண்டு அது சட்டென நின்று ''இந்த குகைக்குள் சிங்கத்தின் காலடிச்சுவடுகள் போவது பதிந்துள்ளன. ஆனால் சிங்கம் திரும்பி வந்ததற்கான தடையம் எதுவும் தெரியவில்லை. எனவே சிங்கம் குகைக்குள்தான் இருக்கிறது. அதைப் பரீட்சித்துப் பார்த்து சிங்கம் உள்ளே இல்லை என்பது உறுதியான பிறகே உள்ளே செல்ல வேண்டும்'' என்று யோசித்தது. அதற்குப் பிறகு அது குகைக்கு வெளியே நின்று ''குகையே. நீ விழித்திருக்கிறாயா?"" எனக் கேட்டது. சற்று நேரம் எதுவும் பதில் இல்லாது போகவே நரி மறுபடியும் அதே கேள்வியைக் கேட்டது.

அப்போது சிங்கம் ''இந்தக் குகை பதில் சொல்லும் போலிருக்கிறது. இன்று நான் குரல் கொடுக்கிறேன் என்று மெதுவாக உறுமியது. அப்போது நரி ''ஓ! இதுவா விஷயம். இப்படி சிங்கம் போல குகை பேசாதே"' எனக் கூறியவாறே ஓடி விட்டது.



# யன் அரசர்களின் சமாதி

சீன தேசத்தில் ஹோனன் பகுதியில் அன்யாங் என்ற ஊரருகே கி. மு. பனிரெண்டாம் நூற்றாண்டு ஆரம்பத்திலிருந்த யன் அரசர்களின் சமாதி இருப்பது தெரிய வந்துள்ளது. அது இடிபடாமல் உள்ளது. அதில் கிடைத்த வெண்கலப் பொருள்களின் மீது பொறிக்கப்பட்ட பெயர்களைப் பார்த்ததில் அவை ஊடிங் மன்னனின் மனைவியுடையது எனத் தெரிகிறது.

இதில் சுமார் இரு நூறு வெண்கலப் பாத்திரங்கள். இவற்றில் எழுபது சதவிகிதம் குடிப்பதற்கு உபயோகப் படுபவை இவற்றில் ஜோடிஜோடியாக உள்ள பெரிய பாத்திரங்களில் பல மிருகங்களின் உருவப்படங்கள் பொறிக்கப்பட்டுள்ளன.

இந்த சமாதியில் நானூறுக்கும் மேற்பட்ட இன்னும் பல பொருள்கள் கிடைத்துள்ளன. பலவித ஆடைகள் ஆபரணங்கள், பலவித மிருகங்கள் பொறிக்கப்பட்ட உருவங்கள், கரடி, யானை, புலி, எருது, ஆடு, குதிரை, குரங்கு, முயல் போன்ற உருவப் பொம்மைகளும் கிடைத்துள்ளன.






# மர்மத் தடாகம்

## 28

*[ தடாகத் தம்பிரான் சுருக்குக் கயறு போட்டு வேலனைப் பிடித்தான். வேலனும் அவனோடு நயமாகப் பேசி அரசகுமாரியோடு அரசகுமாரனையும் அழைத்துச் செல்லும் நோக்கத்தோடு மர்மத் தடாகம் இருக்கும் இடத்திற்குப் போனான். அது மனிதர்களை விழுங்கும் ராட்சஸர் வாயிலாக கோணங்கிக்குத் தெரிந்தது. அப்போது.— ]*

**வி**சித்திர யானை மீதும் மற்றவனோடும் சென்றவர்களைப் பற்றி விவரங்களைக் கேட்டதும் கோணங்கி தடாகத் தம்பிரானோடு சென்றவன் வேலன்தான் என்று அறிந்து கொண்டு விட்டான். ஆனால் அந்தப் பெண் யார்?

தங்கராசனும் அந்த விவரங்களையெல்லாம் ஆச்சரியப் பட்டவாறே கேட்டு விட்டு கோணங்கியைப் பார்த்தான். கோணங்கியும் ''இந்த விவரங்களைக் கொண்டு பார்த்தால் தடாகத் தம்பிரானிடம் வேலன் அகப்பட்டுக் கொண்டிருக்கிறான் என்பது தெளிவாகிறது. ஆனால் அவ்வளவு பலசாலியான வேலன் எப்படி தடாகத் தம்பிரானிடம் அகப்பட்டானென்பது ஆச்சரியமாக இருக்கிறது. இதில் ஏதோ மர்மம்



இருக்கிறது. வேலனைக் காக்க வேண்டியது என் கடமை. எனவே என்னை இப்போது போக விடுங்கள்'' என்று தன் மனிதக் குரங்கை அருகே அழைத்தான்.

தங்கராசனும் ''கோணங்கி, வேலனைக்காப்பது எப்படி உன் கடமை என்கிருயோ அதுபோல அவனைக் காப்பது என் கடமையும் கூடத்தான். எனவே . பொறு. நானும் என் ஆட்களோடு கிளம்பி வருகிறேன். எல்லோருமாகப் போய் வேலனை விடுவித்து வரலாம். ஆனுல் அதற்குள் அவர்கள் மர்மத்தடாகத்திற்குப் போய் விட்டால் என்ன செய்வது? அந்த மர்மத்தடாகம் எங்கே இருக்கிறதென்று தெரிந்து கொள்ளலாம்'' என்ருன்.

கோணங்கியும் தன்னருகே நின்ற ஓநாய்த்தலையனைப் பார்த்து ''உனக்குத்தான் இந்த ரகசியம் தெரியுமே. இப்போது சொல்லப் போகிருயா இல்லையா?'' என்று அதட்டிக் கேட்டான்.

ஓநாய்த்தலையனும் ''நான்தான் முதலில் சொன்னேனே. அதைச் சொன்னுல் என் தலை வெடித்து சுக்குநூருகிவிடும் என்ற சாபம் இருக்கிறது. அதனுல்தான் சொல்லாமல் இருக்கிறேன்'' என்ருன்.

கோணங்கி ''சாபமாவது! மண்ணுங்கட்டியாவது!! உங்கள் சக்தியெல்லாம் தெரிந்து விட்டது. அந்தத் தடாகத் தம்பிரானே மனிதர்களை விழுங்கும் ராட்சஸர்களின் கொப்பரையில் வந்து விழவில்லையா? அவனைக் காப்பாற்ற எந்த சக்தியும் வரவில்லையே. நீ தாராளமாகச் சொல். நான் அம்பிகை உபாசகன். என் சக்திவாய்ந்த ஈட்டி இருக்கும் போது எந்த சாபத்தையும் எதிர்க்க முடியும். கவலைப் படாதே. நீ தாராளமாகச் சொல். நான் பார்த்துக் கொள்கிறேன்'' என்ருன்.

ஓநாய்த்தலையனே ''நான் வாய் திறந்து சொன்னுல்தானே என் தலை வெடிக்கப் போகிறது. நான் சில சைகைகளின் மூலம் தெரிவிக்

கிறேன்'' எனக் கூறி சில குச்சிகளை எடுத்து வந்து தரைமீது கீறலானன். பாதி வரையும் போதே அவன் ''என் தலை சுற்றுகிறதே. மார்பே அடைக்கும் போல இருக்கிறதே'' என்ருன்.

அது கண்டு தங்கராசன் ''கோணங்கி, இவனை விட்டுவிடு. இவன் எங்கேயாவது செத்துத் தொலைக்கப் போகிருன். தொலையட்டும். நாமே இதையெல்லாம் கண்டு பிடிக்கலாம்'' என்ருன்.

கோணங்கியோ ''இப்போது வரைந்த இந்த கோடுகள் எவற்றைக்குறிப்பவை?'' என்று கேட்டான். அவனும் ''இது மலைப் பகுதி. இவை காட்டுமரங்கள். மிக உயர்ந்த மரம் ஒன்று சற்று உயரமான குன்றின் மீது உள்ளது. அதன் உச்சாணிக் கிளைமீது ஏறி வடபக்கம் பார்த்தால் மர்மத்தடாகம் தெரியும்'' என்று கூறியவாறே பொத்தென விழுந்தான்.

அதைக் கண்டு எல்லோரும் திடுக்கிட்டுப் போனர்கள். தங்கராசனும் மற்றவர்களும் "ஓநாய்த் தலையன் ஏதோ சாபம் என்று சொன்னனே. அதுதான் பலித்து விட்டதோ. என்னவோ! மர்மத் தடாகம் இருக்கும் இடத்தைத் தெரிவிக்கும் போதே இவன் இறந்து விழுந்து விட்டானே.''



என்று கூறினர்கள் ஆனல் கோணங்கியோ மனம் கலங்கி விடவில்லை. மெதுவாக அவனருகே போனன்.

கோணங்கி அவன் நாடியைப் பிடித்துப் பார்த்துவிட்டும் மூக்கருகே கையை வைத்தும் ''இவன் சாகவில்லை. பயத்தாலே மயங்கி விழுந்து விட்டான். அவ்வளவு தான். இன்னும் சற்று நேரத்தில் எழுந்து உட்கார்வான். கொஞ்சம் தண்ணீர் கொண்டுவாருங்கள்'' என்ருன்.

மனிதர்களை விழுங்கும் ராட்சஸர்களோ நகரவில்லை. கோணங்கி அவர்களைத் தன் ஈட்டியைக் காட்டி மிரட்டினன். அவர்



களது தலைவன் தங்கராசனை வணங்கி ''அரசே. இப்போது தான் தங்களை நேரில் காண்கிறோம். இந்த ஓநாய்த் தலையன் பிழைத்து எழுந்ததும் எங்களுக்குக் கொடுத்து விடுங்கள். சாப்பிட்டு எங்கள் பசியைப் போக்கிக் கொள்கிறோம்'' என்றான்.

அது கேட்டு கோணங்கி ''ஏய் இதென்ன பிதற்றல்? நீங்களெல்லாம் என் சக்தி வாய்ந்த ஈட்டிக்கு பலியாகப் போகிறீர்கள். என்னவோ ஓநாய்த் தலையனை விழுங்கப் போவதாகக் கூறுகிறீர்களே'' என்று அதட்டிக் கேட்டான்.

அப்போது ஒரு குரல் ''கோணங்கி, நிறுத்து. இவர்கள் எல்லோருடைய உதவியும் நமக்குத் தேவைப்படும். யாரையும் ஒன்றும் செய்யாதே'' என்றது. அது கட்டுவிரியனின் குரல்.

அதைக் கேட்டு கோணங்கி தன் ஈட்டியைத் தாழ்த்திக் கொண்டான். எல்லோரும் சற்று விலகி நின்று கொண்டார்கள். கட்டுவிரியனும் கோணங்கியின் பக்கமாக வந்து ஓநாய்த் தலையன் விழுந்து கிடப்பதைப் பார்த்தான். பிறகு கோணங்கியைப் பார்த்து ''இவனை எமலோகத்திற்கு அனுப்பி விட்டாயா என்ன?'' என்று கேட்டான்.

கோணங்கியும் ''இல்லை. இவன் பயத்தால் தன் நினைவை இழந்து விழுந்து விட்டான். அவ்வளவு தான். இன்னும் சற்று நேரத்தில் எழுந்து உட்கார்ந்து விடுவான். தண்ணீர் வந்ததும் முகத்தில் தெளித்தால் சரியாகி விடும்'' என்றான்.

இதற்குள் அரசனின் ஆட்கள் தண்ணீர் கொண்டுவரவே கோணங்கி ஓநாய்த் தலையன் முகத்தின் மீது நான்கைந்து முறை தெளித்து அவன் மயக்கத்தைப் போக்கினான். அவனும் மெதுவாகக் கண்களை விழித்து பார்க்கலானான்.

கோணங்கியும் ''இவன் சாபம் என்று பயந்து மயங்கிக் கீழே

விழுந்து விட்டான். ஏதோ குருட்டு நம்பிக்கை. எதையாவது செய்தால் சாபத்தால் இறந்து விடுவோமோ என்ற பயமே இந்த மயக்கத்திற்குக் காரணம்'' என்றான்.

அப்போது ஓநாய்த் தலையன் ''நான் எந்த லோகத்தில் இருக்கிறேன்?'' என்று கேட்க கோணங்கியும் ''எல்லாம் பூலோகத்தில் தான் இருக்கிறாய். நான் உனக்கு மறுபடியும் உயிர் கொடுத்திருக்கிறேன். எழுந்திரு'' என்றான்.

ஓநாய்த் தலையனும் எழுந்து உட்கார்ந்தான். கட்டுவிரியனும் தங்கராசனை பார்த்து ''எங்கள் வைத்தியதேவர் கூறிய அரசர் தங்கராசர் தாங்கள் தானே. வணக்கம்" என்றான்.

தங்கராசன் அவனை ஆச்சரியத்துடன் பார்த்தான். ''வைத்திய தேவனா? யார் அவன்? இவனைப் பார்த்தாலே வேடிக்கையாக இருக்கிறதே" என்று அவன் கேட்டான்.

கட்டுவிரியனும் ''அந்த வைத்தியதேவரே இங்கு வந்து கொண்டிருக்கிறார். இன்னும் கொஞ்ச நேரத்தில் வந்து சேர்ந்து விடுவார்'' என்று கூறினான்.

அரசன் கோணங்கியைப் பார்த்து ''கோணங்கி, இந்த வைத்தியதேவன் யாரென்று உனக்குத் தெரியுமா?'' என்று



கேட்டான். கோணங்கியும் "தெரியும். அவர் வெற்றி வேலனைப் போலவே தங்கள் எதிரியின் நாட்டைச் சேர்ந்தவர்'' என்றான். தங்கபுர அரசனும் ''வேலனும் என் எதிரியின் நாட்டில் வசிப்பவனா? எல்லாம் ஒரே குளறுபடியாக இருக்கிறதே'' என்றான்.

கோணங்கி ''ஆனால் இந்த வெற்றி வேலன் உண்மைக்காகப் பாடுபடுபவன். தங்கள் நாட்டில் வேவுபார்க்கவரவில்லை. சொன்ன சொல் தவறாதவன். தங்களிடம் வாக்களித்தபடி இன்னமும் தங்களது மகளையும் மகனையும் தேடிக் கண்டு பிடிக்கும் முயற்சியில் தான் ஈடுபட்டிருக்கிறான்'' என்றான்.



இப்படி அவர்கள் பேசிக் கொண்டிருக்கும் போது மனிதர்களை விழுங்கும் ராட்சஸர்கள் நின்ற இடத்தில் பலத்த ஆரவாரம் கேட்டது. கோணங்கி ''என்ன விஷயம்?'' என்று கேட்க மொடா வயிறனும் ''உங்களைப் போல நான்கு மனிதர்கள் சில ஓநாய்த் தலைவர்களுடன் சண்டை போட்டுக் கொண்டிருக்கிறார்களாம். நாங்கள் உங்கள் மனிதர்களுக்கு உதவியாகப் போகலாமா?" என்று கேட்டான்.

கட்டுவிரியனும் ''ஓ! அப்படியானால் அவர்கள் வைத்தியதேவனும், என் தம்பி கண்ணாடி விரியனும் அன்னரதம் ஓட்டும் தேரோட்டியாகவும் தான் இருக்க வேண்டும் நான் இப்போதே போகிறேன்'' எனக் கூறியவாறு தன் குதிரை மீது ஏறி உட்கார்ந்து கொண்டு கிளம்பினான்.

கோணங்கியும் ''இந்த ஓநாய்த் தலையர்களிடமிருந்து நம் ஆட்களைக் காக்க வேண்டும். நான் இப்போதே என் மனிதக் குரங்கின் மீது ஏறிக் கொண்டு போகிறேன்" எனக் கூறி 'சக்'கென்று தாவி மனிதக் குரங்கின் தோளின் மீது பாய்ந்து உட்கார்ந்து கொண்டான். அதுவும் வேகமாகக் கிளம்பியது.

மனிதர்களை விழுங்கும் ராட்சஸர்களும் ''இனி நாமும் போவோம். நமக்கு நல்ல ஆகாரத்தைத் தான் நம் தேவதை அனுப்பி வைத்திருக்கிறது. இந்த சந்தர்ப்பத்தை நாம் விட்டு விடக் கூடாது'' எனக் கூறியவாறே அங்கிருந்து நகர்ந்தார்கள்.

அங்கு ஓநாய்த் தலையர்களிடம் அகப்பட்டவர்களில் கண்ணாடி விரியன் தன் வாளால் சிலரைக் குத்தி வீழ்த்தலானான். ஆனால் ஓநாய்த் தலையர்கள் வைத்திய தேவனை தேவசர்மனையும் சேனாதிபதியின் மகனை நொண்டியையும் அன்னரதத்தை ஓட்டும் தேரோட்டியையும் பிடிக்க முயன்றார்கள்.

தேவசர்மனே தன் கையிலிருந்த குச்சியால் தடுத்து ''அட முட்டாள்களே. இந்தக் குச்சியின் நுனியில் உள்ள முட்களில் விஷம் தோய்ந்துள்ளது. உங்கள் உடம்பில் பட்டால் போதும் மறுநிடமே சுருண்டு விழுந்து இறந்து போவீர்கள்'' என எச்சரித்தான்.

அதைக் கேட்டு ஓநாய்த் தலையர்கள் திகைத்து நின்றார்கள். அவர்கள் தேவசர்மனை அணுகவே பயப்படலானார்கள். இந்த சமயத்தில் கோணங்கியும் கட்டுவிரியனும் அங்கு வந்து சேர்ந்தார்கள். அவர்களின் பின்னால் தங்கராசனின் வீரர்களும் கூச்சல் போட்டுக் கொண்டே அங்கு வந்து சேர்ந்தார்கள்.

இவ்வளவு பெரிய கூட்டம் வருவது கண்டு ஓநாய்த் தலையர்கள் தப்பி ஓட வழி பார்க்கலானார்கள். அதற்குள் அவர்களது தலைவன் ''இவர்களை நாம் பிடித்துச் செல்ல முடியா விட்டால் கொன்று விடும் படியல்லவா நமக்குக் கட்டளை பிறப்பிக்கப் பட்டுள்ளது. எனவே இவர்களைக் கொல்லலாம்'' எனக் கூறியவாறே தேவசர்மனை நோக்கி ஓடி வந்தான்.

தேவசர்மன் தன் கையிலிருந்த குச்சியை ஆட்டியவாறே ''ஏன் வீணாக சாவை வரவழைத்துக் கொள்கிறாய்? நான் முதலிலேயே



எச்சரித்து விட்டேனே. கேட்கவில்லையா? என் கையில் உள்ள குச்சியைப் பார். இதன் சக்தி தான் தெரியுமே. இது கொஞ்சம் ஒருவனது உடலில் பட்டாலே போதும். மறு கணமே இறந்து வீழ்வான். உனக்கு இறந்து போக வேண்டும் என்று ஆசையாக இருக்கிறதா?'' என்றான். அவனோ தேவசர்மனைத் தாக்க முயலவே தேவசர்மனும் தன் குச்சியிலிருந்த முள்ளால் அவனைத் தொட்டான். மறு நிமிடமே அந்த ஓநாய்த் தலையர்களின் தலைவன் 'ஓ'வென அலறியவாறே கீழே விழுந்து துடிதுடிக்கலானான். அப்போது தேவசர்மன் ''பார்த்தீர்களா? நீங்களும் இதே

கதியைத்தான் அடைய விரும்புகிறீர்களா? இதுவே என் எச்சரிக்கை. மர்மத் தடாகத்திலிருக்கும் அரசகுமாரனுக்கும் அரசகுமாரிக்கும் எதாவது கெடுதல் நேர்ந்தால் உங்கள் எல்லோரையும் ஒரே நொடியில் எமலோகத்திற்கு அனுப்பி விடுவேன். இதைச் சொல்லி உங்கள் தலைவர்களையெல்லாம் எச்சரிக்கை செய்யுங்கள்'' என்றான்.

ஓநாய்த் தலையர்கள் தப்பினோம் பிழைத்தோம் என்று காட்டை நோக்கி ஓடினார்கள். கட்டுவிரியன் தேவசர்மனருகே வந்து ''இந்த ஓநாய்த் தலையர் ஆபத்து வரப் போவதை அறியாமல் தடாகத் தம்பிரானும், வேலனும் அரசகுமாரியும் மர்மத் தடாகத்தை நோக்கிப் போய்க் கொண்டிருக்கிறார்களல்லவா? அவர்களை நாம் முன் கூட்டியே எச்சரிக்க வேண்டுமே'' என்றான். தேவசர்மனும் ''ஆமாம், அதனை நீயும் உன் தம்பியும் அன்னரதத்தை ஓட்டுபவனுமாகச் செய்யுங்கள். தாமதிக்க வேண்டாம். உடனே கிளம்புங்கள்'' என்றான்.

''தம் தலைவருக்குப் பெருத்த ஆபத்து என்பதைக் கேட்டதும் கண்ணாடி விரியனும் கட்டு விரியனும் திடுக்கிட்டுப் போனார்கள். மேலும் ஓநாய்த் தலையர்கள் மர்மத் தடாகத்திற்கே போய் தாக்குதலை நடத்தப் போகிறார்கள் என்பதை அறிந்ததும் அவர்கள் கைகள்'' துடித்தன.

மறுநிமிடமே கட்டுவிரியனும் கண்ணாடி விரியனும் தம் குதிரைகளைத் தட்டி விட்டார்கள். அன்னரதத் தேரோட்டியும் தான் மறைத்து வைத்திருந்த அன்னரதத்தில் ஏறிக் கொண்டு ஆகாயத்தில் கிளம்பி விட்டான். மனிதர்களை விழுங்கும் ராட்சஸர்களோ ஓடும் ஓநாய்த் தலையர்களை இன்னும் வேகமாக ஓடச் செய்து துரத்தலானார்கள்.





# ஜாதக ரகசியம்

**த**ன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அங்கு தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அதனைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள் இருந்த வேதாளம் எள்ளி நகைத்து ''மன்னனே. நீ விடாமுயற்சியில் முழுநம்பிக்கை கொண்டிருக்கிறாய். ஆனால் நடப்பது என்னவோ ஆண்டவனின் விருப்பப்படிதான் நடக்கும். இதை விளக்க ஒரு சோதிடனின் கதையைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்'' என்று கூறி கதை சொல்லலாயிற்று.

மாளவமன்னன் மானசிம்மன் மாபெரும் வீரன். அவன் அரியாசனத்தில் அமர்ந்ததுமே அண்டை நாட்டு மன்னனோடு போர் புரிய வேண்டியதாயிற்று.

## வேதாளம் சொல்லும் கதை

போரில் மானசிம்மனே வெற்றி பெற்று இரண்டு நாடுகளின் மன்னனுகி விட்டான்.

மன்னன் இம்மாதிரியே இன்னும் பல நாடுகளோடு போர் புரியக் கிளம்பி விடுவானே என பயந்து மந்திரி ஆஸ்தான சோதிடரிடம் அரசனின் ஜாதகத்தைக் காட்டினுன்.

சோதிடரும் அந்த ஜாதகத்தைப் பார்த்து விட்டு அரசன் காதில் விழும்படியாக உரத்த குரலில் மந்திரியிடம் ''நம் அரசருக்கு இரண்டு நாடுகளை மட்டுமே ஆள்வதற்கான யோகம் இருக்கிறது. அவர் இன்னெரு நாட்டின் மீது இனிமேல் படை எடுத்தால் தோல்வி அடைவதோடு மட்டுமல்லாமல் இப்போது ஆண்டு வரும் இரண்டு நாடுகளையும் கூட இழந்து விடுவார்'' என்றுர்.

அதைக் கேட்ட அரசன் ''அப்படியானுல் என் பராக்கிரமத்தை இனிக் காட்டவே முடியாதா?'' என்று கேட்டான். மந்திரியும் சோதிடரும் ''ஏன் முடியாது? நீங்கள் நம் நாட்டிலேயே போட்டிகளை ஏற்படுத்தி அதில் நீங்கள் கலந்து கொண்டு உங்கள் வீரதீரத்தைக் காட்டலாம்'' என்றுர்கள். அது முதல் அரசனும் அவ்வாறே செய்தான். பல அரசர்கள் மானசிம்மனேடு மற்போர், வாட்போர் என்று பலவகைப் போர்களில் கலந்து கொண்டு அவனிடம் தோற்றுப் போனுர்கள்.



மானசிம்மனும் தோற்றவர்களை அவமதியாமல் கௌரவமாகவே நடத்தி பல பரிசுகள் கொடுத்து மரியாதையுடன் அவர்களது நாடுகளுக்கும் அனுப்பி வந்தான். அவர்களும் மானசிம்மனின் நண்பர்களாயினர்.

இப்படியே சில வருடங்கள் கழிந்தன. மானசிம்மனின் ஆஸ்தான சோதிடரின் தம்பி மச்சநாட்டு மன்னனிடம் ஆஸ்தான சோதிடனாக வேலைக்கு அமர்ந்தான்.

மானசிம்மனுக்கு ஆண் சந்ததியே இல்லை. மகள் ஒருத்தியே இருந்தாள். அவளை மணக்க பல அரசகுமாரர்கள் விரும்பினார்கள்.

மச்சநாட்டு மன்னன் அச்சுத சிம்மன் இளைஞன். அவனும் மான சிம்மனின் மகளை மணக்க விரும்பினான். ஆனால் அவனிடம் படை பலம் இல்லை. அவனது நாடும் சிறியது. எனவே தன்னை விடத் தாழ்ந்த அந்தஸ்திலுள்ள அச்சுத சிம்மனுக்கு மானசிம்மன் தன் பெண்ணைக் கொடுக்க மாட்டான். இதை நினைத்து அச்சுதசிம்மன் கவலைப் பட்டவாறே தன் ஆஸ்தான சோதிடரிடம் என்ன செய்யலாம் என்று கேட்டான்.

சோதிடனும் அவனது ஜாதகத்தைப் பார்த்து விட்டு ''அரசே. உங்களுக்கு மூன்று நாடுகளை ஆளும் யோகம் இருக்கிறது. எனவே நீங்கள் மானசிம்மனுக்கு ஒரு கடிதம் எழுதி அனுப்புங்கள். அதில் அவன் தன் மகளை தங்களுக்



குக் கல்யாணம் செய்து வைக்க சம்மதிக்க வேண்டும் என்றும் அப்படி இணங்காவிட்டால் அவனது நாட்டின் மீது நீங்கள் படை எடுத்து வரப்போவதாகவும் எழுதுங்கள். பிறகு என்ன நடக்கிறது என்று நீங்களே பாருங்கள்'' என்ருன்.

அச்சுதசிம்மனும் அது போலவே மானசிம்மனுக்கு கடிதம் எழுதி அனுப்பிஞன். கடிதம் கிடைத்ததும் மானசிம்மன் மறு பேச்சு பேசாமல் தன் மகளை அச்சுதசிம்மனுக்கு மணமுடித்து வைத்தான்.

வேதாளம் இக்கதையைக் கூறி ''மன்னனே, மகாபலசாலியான மானசிம்மன் ஏன் ஒரு சிறு நாட்டு மன்னனுன அச்சுதசிம்மனின் மிரட்டலுக்குப் பயந்து விட்டான்? தன் மகளை ஏன் அச்சுதசிம்மனுக்கே அவ்ன் மணமுடித்து வைத்தான்? இக்கேள்விகளுக்கு பதில் தெரிந்திருந்தும் நீ கூருவிட்டால் உன் தலை வெடித்து சுக்கு நூருகி விடும்'' என்றது.

விக்கிரமனும் ''மானசிம்மனுக்கு சோதிடத்தில் அபாரநம்பிக்கை எனவே அவன் அச்சுதசிம்மனுடன் போர் புரிய விரும்பவில்லை. ஏனெனில் இனி போர் புரிந்தால் தோல்வி நிச்சயம் என்றும் தன்னிடமுள்ள இருநாடுகளும் கைவிட்டுப் போய் விடுமே என்று நினைத்தே அச்சுதசிம்மனேடு போர்புரிய விரும்பாமல் தன்மகளை அவனுக்கு விவாகம் செய்து கொடுத்தான். இந்த ஜாதக ரகசியம் மச்சநாட்டு ஆஸ்தான சோதிடனுக்குத் தெரிந்திருந்ததாலேயே அவ்வாறு ஒரு கடிதம் எழுதி அனுப்புமாறு யோசனை சொன்ஞன்'' என்ருன்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பி மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.



# சகோதர பாசம்

ஒரு நாட்டு மன்னனிடம் சில அடிமைகள் இருந்தனர். ஒரு தடவை அரசனின் பொக்கிஷத்தில் பணம் இல்லாது போகவே எப்படியாவது பணம் சேர்க்க வேண்டுமென்று அவன் எண்ணினான். எனவே தன் அடிமைகளிடம் ''நீங்கள் வேலை செய்து ஆயிரம் ரூபாய் வீதம் கொடுத்தால் அப்படி பணம் கொடுப்பவனுக்கு சுதந்திர வாழ்வு அளிப்பேன்'' என்றான்.

அந்த அடிமைகளில் இருவர் அண்ணன் தம்பி. தம்பிக்கு உடல் பலம் அவ்வளவாக இல்லை. அண்ணனே பலசாலி. அவன் வேலை செய்து ஆயிரம் ரூபாய் சேர்த்துக் கொண்டு போய் அரசனிடம் கொடுத்து ''இதைப் பெற்றுக் கொண்டு என் தம்பியை விடுதலை செய்யுங்கள்'' என்றான்.

அது கேட்டு மன்னன் ''நீ உழைத்து சம்பாதித்து நீ விடுதலை அடையாமல் உன் தம்பிக்காக கொடுக்கிறாயே. ஏன்?" என்று கேட்டான். அவனோ ''என் தம்பிக்கு பலம் இல்லை. அவனால் உழைக்க முடியாது. நான் இன்னமும் உழைக்க முடியும். நான் கவனிக்காமல் என் தம்பியை வேறு யார் கவனிக்கப் போகிறார்கள்?'' என்றான்.

அரசனும் அவன் தன் தம்பி மீது வைத்துள்ள பாசத்தைக் கண்டு மகிழ்ந்து பணம் வாங்கிக் கொள்ளாமலேயே இருவருக்கும் விடுதலை அளித்தான்.

—எம். கல்பனா






# அம்மனு பேசியது?

உபகாரி உலகநாதன் தன் நாயுடன் ரங்கபுரத்தை அடைந்தான். அவனைப் பற்றி முன்பே கேள்விப் பட்டிருந்த சிலர் ''இவ்வூரில் அதிசயமான முறையில் கோவில் நகைகள் திருடு போகிறது. நாங்கள் இரண்டு தடவைகள் பணம் வசூலித்து அம்மனுக்கு விலையுயர்ந்த நகைகளைப் போட்டோம் அவை களவு போய் விட்டன. மறுபடியும் கிடைக்கவே இல்லை. அவற்றை எடுத்தவர்கள் இறந்தும் போய் விட்டார்கள்'' என்றனர்.

அது கேட்டு உலகநாதன் ''ஓ! கேட்பதற்கே சுவாரஸ்யமாக இருக்கிறதே. கொஞ்சம் விவரமாகச் சொல்லுங்கள்'' என்ருன். ஒருவன் உடனே சொல்லலானுன்.

இந்த ஊரின் பெரியபணக்காரரர் தங்கரத்தினம். அவருக்கு நல்ல செல்வாக்கு அவர் பேச்சை யாரும் தட்டமாட்டார்கள். இந்த ஊரில் எழுதப் படிக்கத் தெரிந்தவர்கள் இல்லாததால் அவரிடம் தான் பத்திரம், கணக்கு வழக்கு எல்லாம் எழுத.எல்லோரும் போவார்கள். அவரும் எல்லோருக்கும் உதவுவார்.

ஒரு முறை அவர் எல்லோரிடமும் நிதி வசூலித்து கோவில் கட்டி அம்மனுக்கு லட்ச ரூபாய் பெறுமானமுள்ள நகைகளையும் செய்து வைத்தார். நகைகளை வைக்க கோவிலில் ஒரு இரும்புப் பெட்டி இருந்தது. கோவிலின் கதவைப் பூட்ட பலமான பூட்டும் இருந்தது கோவில் திறந்திருக்கும் போது அதன் சாவி அர்ச்சகரிடமும் இரவு கோவிலைப் பூட்டிய பிறகு அந்த சாவி தர்மகர்த்தா தங்கரத்தினத்திடமும் இருக்கும். இப்படியிருக்க ஒரு நாளிரவு திடீரென அம்மனின்

சோம. நாராயணன்

நகைகள் திருடு போய் விட்டன. காலையில் கதவைத் திறந்த அர்ச்சகர் கோவிலில் நகைகள் இல்லாமலிருப்பது கண்டு ஓடிப் போய் தங்கரத்தினத்திடம் விஷயத்தைக் கூறினார். அவரும் கோவிலுக்கு ஓடோடி வந்தார். இதற்குள் விஷயம் பரவி கூட்டமும் கோவிலில் கூடி விட்டது.

தர்மகர்த்தா தங்கரத்தினம் அம்மனின் முன் நின்று ''தாயே, இதென்ன சோதனை! நாங்களெல்லாம் எவ்வளவு கஷ்டப்பட்டு பணம் சேர்த்து உனக்கு நகை செய்து போட்டோம். இப்போது இதை யாரோ திருடிக் கொண்டு போய் விட்டானே? திருடன் யாரென்று நீ சொல். அவனைப் பிடித்து கண்ட துண்டமாக்குகிறேன்'' என்றார்.

அப்போது விக்கிரகம் ''பக்தா, திருடன் உங்கள் ஊரிலேயே இருக்கிறான். அவன் தான் பக்காத் திருடன் பக்கிரி. ஆனால் அவனை ஒன்றும் செய்யாதீர்கள். ஏதோ தெரியாமல் செய்து விட்டான்'' என்று கூறியது.

எல்லோரும் அயர்ந்து போய் விட்டார்கள். பக்கிரி சிறு திருட்டுக்களைத்தான் அவ்வப்போது செய்து வந்தான். இப்போது ஒரேயடியாக லட்சம் ரூபாய் பெறுமான நகைகளைத் திருடி விட்டானே. சிலர் ஓடிப் போய் அவனை இழுத்து வந்தார்கள்.



தங்கரத்தினமும் ''டேய் பக்கிரி, நகைகளை எங்கே வைத்திருக்கிறாய். கொடுத்து விடு. அம்மன் உன்னை ஒன்றும் செய்ய வேண்டாம் என்று கூறி இருக்கிறாள்'' என்று கேட்டார்.

பக்கிரியோ ''நான் நகைகளை எடுக்கவே இல்லையே'' என்று திரும்பத் திரும்பக் கூறலானான். அது கேட்டு தர்மகர்த்தா ''பக்கிரி! இப்படி நீ மறுத்துக் கூறுவதால் எவ்விதப் பயனும் இல்லை. ஏதோ பெருத்த தொகை கிடைக்கும் என்று ஆசைப்பட்டு அம்மனின் நகைகளைத் திருடி விட்



டாய். எடுத்த நகைகளைக் கொடுத்து விடு. உன்னை நாங்கள் ஒன்றும் செய்யாமல் விட்டு விடுகிறோம். அம்மனும் உன்னை ஒன்றும் செய்யவேண்டாம் என்று சொல்லி இருக்கிறாள். அதனால் பயப்படாதே. உன்னைக் கோவிலுக்குள் விட்டுப் பூட்டி விட்டுப் போகிறோம். நன்றாக யோசித்து பதில் சொல். அம்மனின் கோபத்திற்கு ஆளாகாதே வீணாக ரத்தம் ரத்தமாகக் கக்கி நீ இறந்து போய் விடுவாய்'' என்று கூறி அவனைக் கோவிலுக்குள் தள்ளி கதவைச் சாத்திப் பூட்டி விட்டு சாவியை எடுத்துக் கொண்டு போய் விட்டார்.

மறு நாள் காலையில் தர்ம கர்த்தா தங்கரத்தினம் வந்து கோவில் கதவைத் திறந்த போது பக்கிரி இரத்த வெள்ளத்தில் மூழ்கிக் கிடப்பதை எல்லோரும் பார்த்தார்கள். நகைகளைப் பற்றி அவனிடமிருந்து அறியலாம் என எண்ணிய ஊராருக்கு இது பெருத்த ஏமாற்றமாகப் போய் விட்டது.

பக்கிரியின் உடலை கோவிலிலிருந்து அப்புறப் படுத்தி சம்புரோக்ஷணம் செய்து கோவிலை சுத்தப் படுத்தினார்கள். கொஞ்ச நாட்களுக்குப் பிறகு தங்கரத்தினம் ஊராரிடம் ''அம்பிகை என் கனவில் தோன்றி தன் கைகளும் கழுத்தும் மூளியாக இருக்கிறதென்றும் நகைகள் செய்து போடு என்றும் கூறினாள். எனவே நிதி வசூலித்து நகை செய்து போடலாம்'' என்றார். ஊராரும் நன்கொடைகளை அளித்து இரண்டு லட்சம் ரூபாய்கள் கொடுக்க இலட்சம் ரூபாய்க்கு மேல் மதிப்புள்ள நகைகள் செய்யப்பட்டு அம்மனுக்கு சாத்தப்பட்டது. சிறப்பாக உற்சவமும் நடந்தது

ஆனால் ஏழெட்டு மாதங்களுக்குப் பிறகு ஒரு நாளிரவு அந்த நகைகள் காணுமல் போய் விட்டன. மறு நாள் காலையில் தர்ம கர்த்தா அம்மன் முன் நின்று

''தாயே. உன் நகைகளைக் காக்க முடியாத இந்த ஜென்மம் எதற்கு? இதோ கத்தியால் என்னையே குத்திக் கொண்டு நான் சாகிறேன். இந்தக் கொடுமையை என்னால் சகிக்க முடியவில்லையே'' எனக் கூறியவாறே தன் மடியிலிருந்து கத்தியை எடுத்துக் கொண்டார்.

அப்போது சிலர் சட்டென அவரது கையைப் பிடித்துக் கொண்டு ''ஆகா! நீங்கள் ஏன் சாகவேண்டும்? யாரோ நகையைத் திருடினான் என்றால் அதற்கு நீங்களா பொறுப்பு'' என்றனர்.

இதே சமயம் அம்மன் விக்கிரகம் ''பக்தா. நீ பொறுமையாய் இரு இந்தத் திருட்டை செய்தவன் இந்த ஊர் முரடன் மொட்டையன்'' எனக் கூறியது. உடனே சிலர் மொட்டையனைப் பிடித்து வரச் சென்றார்கள்.

தங்கரத்தினமும் எல்லோரிடமும் ''மொட்டையன் வந்ததும் யாரும் அவனை எதுவும் சொல்லாதீர்கள் அவனையும் அம்மனின் கோபத்திற்கு ஆளாக்கி விடாமல் நயமாகப் பேசி நகைகளைப் பற்றி அறியலாம்'' என்றார்.

ஆனால் மொட்டையனைத் தேடிச் சென்றவர்கள் திரும்பி வந்து ''அவன் வீட்டில் கொலை செய்யப்பட்டுக் கிடக்கிறான்'' என்றார்கள். அது கேட்டு தங்கரத்தினம் ''ஆ!



இதுவும் இப்படியா'' என்று கூறியவாறே மயங்கி விழுந்தார். அவரை மயக்கம் தெளிவித்து அவரது வீட்டிற்கு அழைத்துச் சென்றார்கள். மறுபடியும் நிதி வசூலிக்கப்பட்டு அம்மனுக்கு நகைகள் செய்து சாத்தப்பட்டன. ஆனால் அவை பத்திரமாக இருக்குமென்ற நம்பிக்கை ஊராருக்குப் போய் விட்டது.

இதையெல்லாம் கேட்டு விட்டு உலகநாதன் ஊர்க் கோவிலுக்குள் சென்று ஓரிடத்தில் உட்கார்ந்தான். கோவில் அர்ச்சகரின் பெண் லட்சுமி சூடிக்கையானவள். அவள் உலகநாதனைப் பற்றி கேள்விப்பட்டிருந்தாள். எனவே



அவனிடம் ''அம்மனின் நகைகள் திடீரென மறைந்து போகின்றன. அவற்றைத் திருடியது யார் என்பதை அம்மன் எல்லோரும் கேட்கக் கூறுகிறது. ஆனால் அந்தத் திருடர்களைப் பிடித்து வந்தால் அவர்களிடமிருந்து விஷயத்தை அறியுமுன் அவர்கள் எப்படியோ இறந்து விடுகிறார்கள். இதில்தான் ஏதோ இரகசியம் மறைந்திருக்கிறது. நகைகள் யாரோ ஒருவரிடம் பத்திரமாக இருக்கின்றன. அவர் ஏதோ சூழ்ச்சி செய்கிறார். இந்த அம்மன் விக்கிரகம் பேசுவது என்பதை என்னால் நம்ப முடியவில்லை. என் தகப்பனாரைக் கேட்டேன். அவராலும் சரியான விளக்கம் கொடுக்க முடியவில்லை'' என்றாள்.

உலகநாதனும் ''இந்தக் கோவில் சாமியாரிடம் இருக்கும்?" என்று கேட்டான். லட்சுமியும் ''கோவில் திறந்தபின் என் தந்தையிடம் இருக்கும். இரவு பூஜை முடிந்ததும் கோவிலைப் பூட்டி சாவியை அவர் தினமும் தங்கரத்தினத்திடம் கொண்டு போய்க் கொடுப்பார்'' என்றாள்.

உலகநாதன் ''இன்று நீ கோவிலில் இருந்து நகைகளை எடுத்து ஓரிடத்தில் பத்திரமாக ஒளித்து வை. உன் தகப்பனார் திடீரென நகைகள் காணாமல் போயிற்றெனக் கண்டு தங்கரத்தினத்தை அழைத்து வருவார். பிறகு நடப்பதைப் பார்" என்று ஒரு திட்டத்தைக் கூறினான். அவளும் அதன்படியே செய்தாள்.

நகைகள் காணாமல் போனது கண்டு அர்ச்சகர் ஓடிப் போய் தர்மகர்த்தா தங்கரத்தினத்திடம் செய்தியைக் கூற அவரும் ''பட்டப்பகலிலேயே திருட்டா? கோவிலை உடனே மூடிக் கொண்டு வந்து சாவியைக் கொடுங்கள் நாளைக் காலை அம்மனிடம் கேட்கலாம்" என்றார். அர்ச்சகரும் அவ்விதமே செய்தார். இதற்குள் ஊர் முழுவதும் நகைகள் மாயமாய் போன செய்தி பரவி விட்டது.

மறு நாள் காலையில் கோவிலில் ஓரே கூட்டம். தங்கரத்தினம் கோவில் கதவைத் திறந்து அம்மனின் விக்கிரகத்தின் முன் நின்று "தாயே. மறுபடியும் சோதனையா? யார் இதைச் செய்தது?'' என்று கேட்டார். அப்போது விக்கிரகம் ''இனிமேல் எனக்கு நகையே செய்து போடவேண்டாம். ஆனால் திருடன் யாரெனக் கூறுகிறேன். நகைகளைத் திருடியவன் வண்டிக்கார வடிவேல்'' என்றது.

உடனே சிலர் ஓடிப் போய் வண்டிக்கார வடிவேலை இழுத்து வந்தனர். அப்போது உலகநாதன் முன் வந்து ''நில்லுங்கள். இந்தத் தடவை ஏனோ அம்மன் பொய் சொல்லியிருக்கிறாள். உண்மையை நான் வரவழைக்கிறேன்'' எனக் கூறி விக்கிரகத்தைப் பார்த்து ''தாயே. கொஞ்சம் யோசித்து பதில் சொல். இந்த வடிவேலனா உன் நகைகளைத் திருடினான்?'' என்று கேட்டான்.

அப்போது விக்கிரகம் "யாரடா நீ? நான் சொல்வதில் நம்பிக்கை ஏற்படவில்லையா?'' என்று கோபித்துக் கொண்டு கேட்டது. ஊராரும் தங்கரத்தினமும் உலகநாதனைப் பார்த்து ''யாரப்பா நீ? அம்மனுக்கு ஏன் கோபம் மூட்டுகிறாய்?'' என்று ஆத்திரத்துடன் கேட்டார்கள்.



''இந்த அம்மன் கூறியது முழுப் பொய். இந்த நகைகள் என்னிடம் உள்ளன. நான்தான் அவற்றைத் திருடினேன்'' என்று கூறியவாறே அர்ச்சகனின் பெண் லட்சுமி நகை மூட்டையைக் கொண்டு வந்தாள்.

அப்போது உலகநாதன் ''கோவில் நகைகளை நீங்கள் நினைத்தது போல முன்பு பக்கிரியோ அல்லது மொட்டையனோ திருடவில்லை. இப்போது கூறியது போல பொய்யைச் சொல்லி உங்களையெல்லாம் அவர்களே திருடன் என இந்த அம்மன் குரல் உங்களை நம்பவைத்தது. இப்படிப் பொய் சொன்ன அம்

மனை நான் உங்களுக்குக் காட்டு கிறேன். இதற்கு என் நாய் பயன் படும்'' எனக் கூறி நாயைக் கூப் பிட அது அம்மன் விக்கிரகத்திற் குப் பின் போய் ஒளிந்திருந்த ஒருத் தியை இழுத்து வந்தது. அவள் தங்கரத்தினத்தின் வயலில் வேலை செய்யும் வேலம்மாள்.

அவள் உண்மையைக் கக்கி விட் டாள். இருமுறைகளிலும் நகை களைத் திருடியது தங்கரத்தினமே என்றும் மக்களை நம்ப வைக்கத் தன்னை அவ்வாறு விக்கிரகத்தின் பின்னிருந்து கூறச் சொன்னதை யும் எல்லோர் முன்னிலும் சொல்லி விட்டாள். இதற்குள் தங்கரத்தினம் யார் கண்ணிலும் படாமல் தன் வீட்டிற்கு ஓடி விட்டார்.

கூட்டத்தில் தங்கரத்தினத்தைக் காணுத உலகநாதன் சட்டென அவரது வீட்டிற்கு ஓடிப்போனுன். அப்போது தர்மகர்த்தா நகைகளை மூட்டையாகச் சேர்த்துக் கட்டி எடுத்துக் கொண்டு ஓட முயன்றுர்.

உலகநாதன் அவரைப் பிடித்து கொண்டான். ஊராரும் தங்கரத் தினத்தைச் சூழ்ந்து நின்று கொண் டார்கள். அவன் வைத்திருந்த மூட்டைகளை எடுத்து பிரித்துப் பார்த்தார்கள். முன்பு இரண்டு தடவைகளில் திருடு போனதாகக் கருதப்பட்ட நகைகள் அவற்றில் இருந்தன. நகைகள் கோவிலுக் குக் கிடைத்தன. ஊராருக்கு அது வரை தங்கரத்தினம் பெரிய பக்தன் போல நடித்து வந்தது தெரிந்து போயிற்று. எல்லோரும் அவனை இகழ்ந்தார்கள். யாருமே அவருேடு பேசவும் இல்லை அப் புறம் அந்த ஊரில் தங்கரத்தினம் இருக்கவே இல்லை. இப்படிப் பட்ட ஒரு ஆஷாடபூதியை, வேஷம் போட்டு நடித்த ஒரு வனைச் பிடித்துக் கொடுத்த தற்காக ஊரார் உலகநாதனைப் பாராட்டினர்கள்.



# பந்தயம் எப்படி?

ஒரு அரசனுக்கு எதை எடுத்தாலும் பந்தயம் போடுவதே வழக்கம். தினமும் தர்பாரில் யாருடனாவது பந்தயம் போடுவதே அவன் முதல் வேலை.

ஒரு நாள் தர்பாரில் ஒரு இளைஞன் அவரிடம் ''அரசே. இன்று உங்களுடன் நான் பந்தயம் போடுகிறேன். நீங்கள் வலது கை சுண்டு விரலில் போட்டிருக்கும் மோதிரத்தின் கீழ் ஒரு பெரிய மச்சம் இருக்கிறது என்கிறேன், அப்படி இருந்தால் நீங்கள் எனக்கு நூறு பவுன்கள் கொடுக்க வேண்டும். மச்சம் இல்லாவிட்டால் நான் உங்களுக்கு நூறு பவுன்கள் கொடுக்கிறேன்'' என்றான்.

அரசனும் ''சரி. சம்மதம். ஆனால் நீ தோற்று விட்டாய். நீ கூறியபடி என் சுண்டு விரலில் மச்சம் இல்லை.'' என்று மோதிரத்தைக் கழற்றிக் காட்டினான். இளைஞனும் தான் தோற்றதாக ஒப்புக்கொண்டு நூறு பவுன்களைக் கொடுத்து தர்பாரில் ஒரு புறமாகச் சென்று யாரிடமோ தர்க்கம் செய்யலானான். விஷயம் என்ன என்றால் அந்த இளைஞன் மந்திரியிடம் பந்தயம் போட்டானாம். அது என்னவென்றால் அன்று அரசனை எப்படியாவது கையில் அணிந்திருக்கும் மோதிரத்தைக் கழற்றச் செய்வது என்பதே. அப்படிச் செய்து விட்டால் மந்திரி அந்த இளைஞனுக்கு ஆயிரம் பவுன்கள் தரவேண்டும். அப்படிச் செய்யமுடியாவிட்டால் இளைஞன் ஆயிரம் பவுன்களை கொடுக்க வேண்டும். மந்திரிதான் அவனுக்கு ஆயிரம் பவுன்களைக் கொடுத்தார்.

—எம். பாஷாமொஹிதீன்





# மனதை மாற்றும் பணம்

கோவிந்தன் சம்பாதித்தது அவன் சாப்பிடுவதற்குக் கூட போதாமல் இருந்தது. ஆனால் அவனது நண்பன் சோமுவோ வியாபாரம் செய்து கொழுத்த லாபம் அடைந்து மாடி வீடாகக் கட்டி விட்டான். ஆனால் இருவரிடையேயும் இருந்த நட்பு மறையவில்லை. கோவிந்தன் அடிக்கடி சோமுவின் வீட்டிற்குப் போய் அவனுடன் பேசிக் கொண்டிருந்து விட்டு வருவான்.

ஒரு நாள் சோமு ''கோவிந்தா, நம் நண்பன் குப்புசாமியின் வீடும் கடையும் எரிந்து போய் விட்டதாம். அவன் தெருவில் நிற்கிறானும்'' என்றான். அது கேட்டு கோவிந்தன் ''அடபாவமே. வியாபாரம் செய்யப் பட்டணத்திற்குப் போனானே. இப்படியா ஆயிற்று? சரி வா அவனைப் பார்த்து வரலாம்'' என்றான். சோமுவோ ''வேண்டாம். இப்போது போனால் நம்மிடம் அவன் பணம் கேட்பான்'' என்றான்.

கோவிந்தனோ ''நீ வராவிட்டால் போ. நான் போய் குப்புசாமியைப் பார்த்து அவனுக்கு ஆறுதலாக இரண்டு வார்த்தைகளையாவது சொல்லி விட்டு வருகிறேன்'' எனச் சொல்லி விட்டு அன்று சாயந்திரமே பட்டணத்திற்குக் கிளம்பினான். மெதுவாக நடந்தால் விடிவதற்குள் பட்டணம் போய்ச் சேர்ந்து விடலாம்.

கோவிந்தன் நடந்தவாறே பாதி ராத்திரியின் போது ஒரு ஊரை அடைந்தான் அப்போது பலத்த மழை பெய்யலாயிற்று. அவன் சட்டென ஒரு வீட்டின் முன் நின்று கதவைத் தட்டினான். விளக்கை எடுத்துக் கொண்டு ஒரு கிழவி

பாபநாசம் சர்மா

ஜன்னல் வழியாகப் பார்த்தவாறே ''யாரது? என்று கேட்டாள். கோவிந்தனும் ''நான் ஒரு வழிப் போக்கன். மழையாக இருப்பதால் இன்றிரவுப் பொழுதை உங்கள் வீட்டில் கழித்து விட்டு நாளைக் காலை போய் விடுகிறேன்" என்றான்.

கிழவியும் ''இதோ வருகிறேன்'' எனக் கூறி உள்ளே போனாள். சற்று நேரமாகியும் கதவு திறக்கபடாது போகவே கோவிந்தன் வீட்டின் பின்புறமாகப் போனான். அங்குள்ள ஜன்னல் வழியாகப் பார்த்த போது கிழவி ஒரு துணியை விரித்து அதில் பணத்தைப் போட்டு மூட்டை கட்டி ஒரு பையில் வைத்து அதன் மீது புளியைப் பரப்பி பையை ஓரிடத்தில் சுவரின் மீது தொங்கவிட்டாள்.

இதைப் பார்த்த கோவிந்தன் சட்டென வீட்டு வாசல்புறத்திற்கு வந்தான். இரண்டொரு நிமிடங்களுக்குப் பிறகு கிழவி கதவைத் திறந்தவாறே ''ஊரில் என் மகனும் மருமகளும் இல்லை. யார் வந்தாலும் வீட்டிற்குள் விடவேண்டாமென்று சொல்லிப் போயிருக்கிறார்கள். ஆனால் மழையாக இருப்பதால் நீ உள்ளே வா'' என்றாள்.

கிழவி காட்டிய கட்டிலில் அவன் படுத்துக் கொண்டான். அவனுக்குத் தூக்கம் வரவில்லை. அந்தக்



கிழவி பையில் போட்டு வைத்திருக்கும் பணம் குப்புசாமிக்குக் கிடைத்தால் அவன் மறுபடியும் வியாபாரம் செய்து முன்னுக்கு வந்து விடலாம். அதை எடுத்துக் கொண்டு போகவேண்டியதே என கோவிந்தன் தீர்மானித்துக் கொண்டான்.

கிழவி குறட்டை விட்டுத் தூங்கினாள். கோவிந்தன் சத்தமில்லாமல் எழுந்து சுவரில் மாட்டப் பட்டிருந்த பையை எடுத்துக் கொண்டான். அப்போதே அந்த வீட்டை விட்டுக் கிளம்பி வேக வேகமாகப் பட்டணத்திற்குப் போனான். விடியும் வேளைக்கு அவன் குப்புசாமியின் வீட்டையும்

அடைந்து விட்டான். குப்புசாமியின் நிலை பரிதாபகரமாக இருந்தது. கோவிந்தனும் ஆறுதலாகச் சில வார்த்தைகள் கூறி வழியில் தனக்குப் பணம் கிடைத்ததையும் அதைக் கொண்டு மறுபடியும் வியாபாரம் செய்யலாம் என்றும் சொன்னான்.

குப்புசாமியும் ''கோவிந்தா. நீ எனக்காக உதவ முயன்றதற்காக நன்றி. ஆனால் இந்தப் பணம் எனக்கு வேண்டாம். இதற்கு முன் நான் வியாபாரத்தில் பல மோசடிகளையும் தில்லுமுல்லுகளையும் செய்ததாலேயே இந்த நிலைக்கு இன்று வந்திருக்கிறேன். எனக்கு புத்தி வந்து விட்டது. நான் இப்போது வேறொருவரிடம் மாத சம்பளத்தில் வேலை பார்க்கிறேன். அது போதும் எனக்கு: நீ இந்தப் பணத்தை ஊருக்குத் திரும்பும் போது அந்தக் கிழவியிடமே கொடுத்து விடு'' என்றான். கோவிந்தனும் குப்புசாமிக்கு வாழ ஒரு வழி கிடைத்து விட்டது எனக் கண்டு திருப்தி அடைந்தவனாய் உடனேயே தன் ஊருக்குத் திரும்பினான். வழியில் அவன் முன் இரவு தங்கிய ஊரில் கிழவியின் வீட்டிற்குப் போனான்.

அப்போது அக்கிழவியை அவளது மருமகள் மிரட்டிக் கொண்டிருந்தாள். அவள் மகனோ பேசாமல் நின்றான். இதைக் கண்ட கோவிந்தன் தான் எடுத்துச் சென்ற பையை அவர்கள் முன் வைத்து நடந்ததையெல்லாம் சொன்னான்.

அவர்களும் பணத்தை எடுத்துப் பெட்டியில் போட்டுக் கொண்டு கிழவியை எதுவும் கூறவில்லை. கோவிந்தனையும் உபசரித்து அனுப்பினார்கள். கோவிந்தனோ "இந்தப் பணம்தான் எப்படியெல்லாம் மனதை மாற்றுகிறது! நல்லவனைக் கூட கல்மனமுள்ளவனாக மாற்றி விடுகிறதே." எனக் கூறியவாறே தன் ஊருக்குச் சென்றான்.



# எந்த முறை ஏற்றது?

ஞானபுரத்தில் இரு பண்டிதர்கள் குருகுலங்களை நடத்தி மாணவர்களுக்கு கல்வி போதித்து வந்தார்கள். அவர்களில் ஞானசேகரரின் குருகுலத்தில் ஏராளமான மாணவர்கள் சேர்ந்தார்கள். அவர்களிடம் குரு அன்பாக நடந்து கொண்டதே அதற்குக் காரணம்.

மற்ற குருகுலத்தின் ஆசிரியர் நரசிம்மாச்சாரி. அவர் தம் சிஷ்யர்களிடம் வீட்டு வேலைகளையெல்லாம் செய்யச் சொல்வார். இதனால் அவரிடம் படிக்க வந்தவர்களெல்லாம் மெதுவாகக் கழன்று கொண்டு ஞான சேகரரின் குருகுலத்தில் போய் சேரலானார்கள்.

இதனால் ஆத்திரப்பட்ட நரசிம்மாச்சாரி அரசனுக்கு ''எங்கள் ஊர் ஞானசேகரன் தன் குருகுலத்தில் படிக்கும் மாணவர்களிடம் பணம் வாங்கிக் கொண்டு சான்றிதழ்கள் கொடுக்கிறான். மாணவர்களுக்கு அதற்கேற்ற தகுதி இருப்பதே இல்லை'' என்று புகார் எழுதி அனுப்பினார். அரசனும் ஒரு நாள் குறிப்பிட்டு ஞானசேகரரையும் நரசிம்மாச்சாரியையும் தர்பாருக்கு வர உத்திரவிட்டார்.

அந்த தேதியில் முதலில் குதிரை வண்டியில் வந்து தர்பாருக்கு வந்தது ஞானசேகரரே. நரசிம்மாச்சாரி மாட்டு வண்டியில் வந்து கொண்டிருப்பதாக அறிந்து அரசன் வழக்கை ஒத்திப் போட நினைத்தான்.

அப்போது ஞானசேகரரும் ''நானும் நரசிம்மாச்சாரியும் ஊரை விட்டு ஒரே நேரத்தில் தான் கிளம்பினோம். நான் சீக்கிரம் வர நினைத்ததால் குதிரை வண்டியில் வந்தேன். என் மாணவர்கள் விரைவில் கற்க எண்ணியதால் என் வழியில் சென்று பட்டம் பெறுகிறார்கள். நரசிம்மாச்சாரியார் முறை மாட்டு வண்டியைப்போல மெதுவாகப் போவது'' என்றார். அரசன் விஷயத்தைப் புரிந்துகொண்டு ஞானசேகரரைப் பாராட்டி தன் ஆஸ்தான வித்வானாக நியமித்துக் கொண்டான். நரசிம்மாச்சாரி கல்வி கற்பிக்கும் முறையை மாற்றிக் கொள்ளும்வரை குருகுலம் நடத்தக் கூடாதெனவும் உத்தரவிட்டான்.





# சோதிடம் பலிக்குமே!

**கா**மாட்சி தன் மகனை மணிக்கு ராதை என்ற பெண்ணைக் கல்யாணம் செய்து வைத்தாள். ஆரம்பத்தில் மருமகள் மீது உயிரை வைத்திருந்த காமாட்சி வரவர குணம் மாறி அவளைக் கொடுமைப் படுத்தலானாள். ராதைக்கும் பிறந்த வீடு சரியாக இல்லாததால் எங்கும் போக முடியாதபடி தவித்தாள். மணியும் தன் தாயின் வாய்க்கு பயந்து எதுவும் பேசாமல் இருந்தான்.

இந்த சமயத்தில் மணியின் அக்கா அன்னபூரணியும் பிள்ளைப் பேறுக்காகத் தாயின் வீட்டிற்கு வந்தாள். அவ்வளவுதான்! ராதையின் நிலை இன்னமும் மோசமாகி விட்டது. அம்மாளும் மகளுமாகச் சேர்ந்து ராதையை ஆட்டி வைக்கலானார்கள். ராதையைக் காண அவளது அண்ணன் மோகன் வந்தான். அவன் அங்குள்ள நிலைமையைப் புரிந்து கொண்டு விட்டான். அவன் அதற்கு ஒரு வழி செய்வதாகத் தன் தங்கையிடம் சொல்லி தான் செய்யப் போவதையும் அவளிடம் கூறி விட்டு ஊருக்குக் கிளம்பிச் சென்றான்.

இதற்கு நாலைந்து நாட்களுக்குப் பிறகு ஒரு சோதிடர் காமாட்சி அம்மாளின் வீட்டுப் பக்கமாக வந்தார். காமாட்சிக்கு ஜோசியத்தில் முழுநம்பிக்கை உண்டு. அதனால் அவள் சோதிடரைக் கூப்பிட்டு தன் கை ரேகை பார்த்து சொல்லச் சொன்னாள்.

அவரும் சற்று நேரம்வரை அவளது கை ரேகைகளைப் பார்த்து விட்டு சட்டென எழுந்து ''நான் போய் வருகிறேன் அம்மா'' என்றார். காமாட்சியோ ''என்ன அது? ஒன்றுமே சொல்லாமலும் பணம்

கரூர் கனகரத்தினம்

கூட வாங்கிக் கொள்ளாமலும் போகிறீர்களே. என்ன விஷயம்? சொல்லுங்கள்'' என்றாள்.

சோதிடரும் ''உள்ளதைச் சொன்னால் உங்கள் மனம் வருத் தப்படுமே'' என்றார். காமாட் சியோ ''பரவாயில்லை. நீங்கள் ரேகை பார்த்து உள்ளதைத் தானே சொல்கிறீர்கள்? தாராள மாகச் சொல்லுங்கள்'' என்றாள்.

சோதிடரும் ''அம்மா. உனக்கு இரண்டு கண்டங்கள் உள்ளன. முதலாவதிலிருந்து தப்பினாலும் இரண்டாவதிலிருந்து தப்புவது ரொம்ப கஷ்டம்'' என்றார். காமாட்சியும் ''அப்படியென்ன கண்டங்கள்?'' என்று கேட்டாள். சோதிடரும் ''உன் மகளுக்குப் பிறக்கப் போகும் குழந்தையை நீ அது பத்து வயதாகும்வரை பார்க்கவே கூடாது. இது முதலா வது கண்டம். இதிலிருந்தாவது தப்பி விடலாம். ஆனால் இதை விடப் பெரிய கண்டம் இன்னும் ஒரு மாதத்தில் உனக்கு பாம்பால் ஏற்படப்போகிறது. யாராவது நாகவசீகரண மந்திரத்தைத் தெரிந்து வைத்திருந்தால் அவர் கள் மூலமாகத் தப்பலாம். இதற்கு ஒரு மாதம் நாகபூஜை செய்ய வேண்டும்'' என்று கூறி விட்டுப் போனார்.

காமாட்சி இடிந்து போனாள். அப்போது ராதை ''கவலைப்படா தீர்கள். எனக்கு சிறு வயதில் நாகவசீகரண மந்திரம் கற்றுக்



கொடுத்திருக்கிறார்கள். நான் ஒரு மாதகாலத்திற்கு தினமும் பூசை செய்கிறேன். உங்களுக்கு வரும் பயங்கர கண்டம் போய் விடும்'' என்றாள்.

அது கேட்டு காமாட்சி மகிழ்ந்து போய் ''அப்படியா? தினமும் பூஜை செய். அப்பாடா. எனக்குப் போன உயிர் வந்து விட்டது" என்று கூறி அப்போது முதல் ராதையை நல்ல விதமாக நடத்தினாள்.

அது மட்டுமல்ல. இன்னொரு கண்டத்திலிருந்து தப்ப வேண்டுமே. அதற்காக சோதிடர் கூறிப் போன மறுநாளே காமாட்சி தன் மகளை அவளது மாமியார் வீட்டிற்கே அனுப்பி அங்கேயே பிரசவம் பார்த்துக் கொள்ளுமாறு கூறி விட்டாள். அன்னபூரணியும் மனம் சலித்தவாறே தன் கணவனின் வீட்டிற்குப் போனாள்.

ராதையும் ஒரு மாதகாலத்திற்கு நாகபூஜை செய்தாள். மாதம் முடியும் நாளன்று காமாட்சி ஒரு மரக்கட்டிலின் மீது உட்கார்ந்து விட்டாள். எங்கிருந்தாவது பாம்பு வந்தால் என்ன செய்வது என்ற பயமே அதற்குக் காரணம்.

ராதை விழுந்து விழுந்து பூஜை செய்தும் மற்ற உபசரிப்புகளாலும் காமாட்சியின் மனதைக் கவர்ந்து விட்டாள். மாதம் முடிந்து பாம்பு கண்டம் போயிற்று. சோதிடர் கூறிய கண்டம் தன் மருமகளால் போனதால் காமாட்சி அவளைத் தன் பெற்ற மகளைப் போல நடத்தி வரலானாள்.

இவ்வளவுக்கும் காரணம் மோகன் அனுப்பி வைத்த அந்த 'சோதிடரே' என்பதனையும் அவர் கூறிய ஜோஸ்யத்தால் தான் காமாட்சியம்மாள் மாறினாள் என்பதனையும் ராதை மறந்து விடவுமில்லை. யாரிடமும் தன் அண்ணன் சொன்ன ரகசியத்தைச் சொல்லவும் இல்லை.



# ஒன்றும் கிடைக்கவில்லை!

ஒரு வழிப்போக்கன் ஒரு ஏகாதசியன்று ஒரு கிராமத்தை அடைந்தான். அங்குள்ள ஜமீன்தாரரின் மாந்தோப்பில் மாம்பழங்கள் பழுத்துத் தொங்குவது கண்டு அவற்றில் சிலவற்றைப் பறித்து சாப்பிட்டு விட்டு இருக்கலாம் என எண்ணினன்.

அவன் ஜமீன்தாரரிடம் தன் விருப்பத்தைத் தெரிவித்ததும் அவரும் தோட்டக் காவலாளிக்கு ஒரு கடிதம் எழுதி வழிப்போக்கன் விரும்பும் மாம்பழங்களைப் பறித்துக் கொள்ளட்டும் என அனுமதி கொடுத்தார். வழிப்போக்கனும் அக்கடிதத்தை தோட்டக் காவலாளியிடம் காட்டினன்.

காவலாளியோ ''நீ பறிப்பதில் சரிபாதி எனக்குக் கொடுக்க வேண்டும்'' என்றான். வழிப்போக்கனும் ''ஆகா. கொடுக்கிறேன். நான் கொடுப்பதிலிருந்து ஒரு பழத்தை எனக்கு நீ திருப்பிக் கொடுக்க வேண்டும்'' என்றான். அதற்கு அக்காவலாளி சம்மதித்தான். இது போலவே தோட்ட வேலையாளும் கேட்டதற்கும் வழிப்போக்கன் ஒப்பந்தம் செய்து கொண்டான்.

வழிப்போக்கன் இரண்டு மாம்பழங்களை மாத்திரம் பறித்து தோட்ட வேலையாளிடமும், காவலாளியிடம் ஒவ்வொரு பழமாகக் கொடுத்து அதனை மீண்டும் வாங்கிக் கொண்டு போய் விட்டான்.





# உபத்திரவ உபசாரம்

கண்ணன் தன்னுடைய ஊருக்கு அடுத்தாற் போல இருந்த ஊருக்கு செல்ல வேண்டி இருந்தது அங்கு அவனது உறவினர்கள் பலர் இருந்தனர். அவனுக்கு இரண்டு மூன்று நாட்களுக்கான வேலை இருந்ததால் யார் வீட்டில் போய் தங்குவது என்று தன் தந்தையிடம் யோசனை கேட்டான்.

அவனது தந்தையோ ''நீ யார். வீட்டிலும் தங்காமல் அந்த ஊர்ச் சத்திரத்தில் தங்கி உன் வேலையை முடித்துக் கொண்டு வருவதே நல்லது'' என்றார். கண்ணனோ உறவினர் வீட்டிற்குப் போவதில் தப்பிதம் எதுவும் இல்லை எனக் கருதி அவ்வூருக்குப் போய் தன் நெருங்கிய உறவினர் வீட்டிற்குப் போனான்.

அவன் போகும் போது நன்கு இருட்டி இரவாகி விட்டது. வழியில் அவன் காலில் சுளுக்குப் பிடித்துக் கொண்டதால் சிரமப்பட்டு நடந்து அந்த வீட்டு வாசலில் நின்று கதவைத் தட்டினான்.

அந்த உறவினரும் கதவைத் திறந்து வெளியே 'ஓ! கண்ணனா' எப்போது ஊரை விட்டுக் கிளம்பினாய்?" என்று கேட்டவாறே தன் மனைவியைக் கூப்பிட்டு ''இதோ கண்ணன் வந்திருக்கிறான். ராமுவை வரச் சொல்'' என்றார்.

கண்ணனால் சரியாக நிற்கக் கூட முடியவில்லை. ஆனால் அந்த உறவினரோ அவனை உட்கார விடாமலும் வீட்டிற்குள் போக விடாமலும் வாசலிலேயே நிறுத்தி வைத்துக் கொண்டு ஏதோ பேசிக் கொண்டே இருந்தார். கண்ணன் அங்கேயே திண்ணையில் உட்கார முயன்ற போது ''இரு, ஒரே நிமிஷம். இதோ ராமு வந்து விடு

மீனாட்சி சுந்தரேசன்

வான்'' என்று கூறி அவர் அவனை உட்கார விடவில்லை.

ராமு வருவதற்குச் சற்று தாமதம் ஆயிற்று. அவன் ஒரு சொம்பில் தண்ணீர் கொண்டு வந்து கண்ணனின் கால்களின் மீது கொட்டினான். 'சில்'லென்ற தண்ணீர் பட்டதும் அவனது சுளுக்குப் பிடித்த கால் மேலும் வலிக்கலாயிற்று. அப்போது உறவினர் ''வீட்டிற்கு வரும் விருந்தனர்களுக்குக் கால் கழுவி விட்டே வீட்டிற்குள் அழைத்துச் செல்ல வேண்டும். நீ என்னையும் என் மனைவியையும் விட வயதில் சிறியவன். ஆகவே நான் உன் பாதங்களை அலம்ப நீர் விடக் கூடாது. அதற்காகவே ராமு வரும்வரை காத்திருந்தேன்'' எனக் கூறி உள்ளே அழைத்துப் போனார்.

கண்ணனும் தன் கால் சுளுக்கு பற்றிக் கூறவே உடனே உள்ளூர் நாவிதனை அவர் வரவழைத்து எண்ணெய் தடவி நீவி விடச் சொன்னார். சுளுக்கும் சரியாகியது.

இரவு சாப்பாடானதும் உள்ளூர் சாஸ்திரிகள் வந்து ஏதோ புண்ணிய கதை ஒன்றை எடுத்துச் சொல்ல ஆரம்பித்தார். அது முடிய நள்ளிரவிற்கு மேலாகி விட்டது. கண்ணனுக்கோ தூக்கம் வந்து விட்டது. ஆனாலும் சிரமப்பட்டு கண் விழித்து இருந்தான்.

சாஸ்திரிகள் போனதும் உறவினர் ''வீட்டிற்கு வந்திருக்கும் விருந்தாளியை வைத்துக்





கொண்டு இந்த மாதிரி வேதாந்த விஷயங்களைக் கேட்டால் புண்ணியம் கிடைக்குமாம்'' என்ருர். கண்ணனும் 'ஆமாம்' என்று ஒப்புக்குத் தலையை ஆட்டி விட்டு அவனுக்குப் போடப்பட்ட கட்டிலில் படுத்து தூங்கலானுன்.

எப்போதுமே கண்ணன் காலையில் வீட்டில் சூரியோதயமாகி சற்று நேரம்வரை தூங்குவான். அன்ருே களைத்துப் போய் இருந்தான். ஆனுல் வெகு நேரம் அவன் தூங்க முடியவில்லை. போதாதற்கு ஊரில் திருட்டு பயம் உள்ளது என்று கூறி ஒரு பயங்கர நாயை அந்த உறவினர் அவன் கட்டிலின் பக்கத்திலேயே கட்டிம் வைத்தார்.

நாயோ அங்கும் இங்கும் நடந்து 'உர்' 'உர்'ரென்று சத்தம் போட்டுக் கொண்டே இருந்தது. இதனுல் கண்ணனுல் தூங்க முடியவில்லை. விடியற்காலை வேளைக்கு அந்த உறவினர் வந்து ''எழுந்திரு கண்ணு, கைகால் முகம் கழுவிக் கொள். முதலில் வீட்டிற்கு வந்த விருந்தாளிக்குப் பால் கொடுத்து விட்டுத்தான் மற்றவர்கள் குடிக்க வேண்டும்'' என்ருர்.

கண்ணனும் இப்படி வந்து மாட்டிக் கொண்டு விட்டேனே என எண்ணியவாறே எழுந்து கைகால் முகம் கழுவிக் கொண்டு வந்தான். இரவில் அவன் நடந்து வந்தபோது பனி பெய்ததால் அவனுக்கு ஜல தோஷம் பிடித்து விட்டது. அதனுல் 'நசுக்' 'நசுக்' என்று தும்மலானுன்.

இதைக் கண்ட உறவினரின் வயதான தாயார் ஒரு பஞ்சபாத்திரத்தில் தண்ணீர் எடுத்து வந்து அவன் தும்மும் போதெல்லாம் "தீர்க்காயுசுடன் இரு", என்று நீர் தெளிக்கலானுள். அந்த அம்மாள் தெளித்த நீரால் அவன் தலையே நினைந்து விட்டது. தலையைத் துவட்டிக் கொள்ள நினைத்த போது அந்தக் கிழவி ''பாவம் ஜலதோஷம் பிடித்திருக்கிறது. இந்தத் தீர்த்தம் தலையில் இருப்பதால் எல்லாம் சரியாகி விடும்''

என்று கூறினுள். இப்படி இரண்டு நாட்கள் அந்த உறவினர் வீட்டு உபசாரங்களில் தவித்துப் போய் கண்ணன் மறு நாள் ஊருக்குக் கிளம்பத் தீர்மானித்துக் கொண்டார்கள்.

உறவினர் சும்மாவிட்டு விடுவாரா? சாப்பாட்டிற்குப் பிறகு விசேஷமாகத் தயாரிக்கப்பட்ட ஒரு டம்ளர் பாயசத்தை அவனிடம் கொடுத்து அவர் ''எங்கள் வீட்டு வழக்கம் விருந்தினர் ஊருக்குப் போகும் போது இத்தகைய பாயசம் குடிக்க செய்வதே. இந்தப் பாயசம் முழுவதும் வந்த விருந்தாளியே குடிக்க வேண்டும். சாதாரணமாக ஒரு முறை இந்த வீட்டிற்கு ஒரு விருந்தாளி வந்து விட்டுப் போனுல் மறுபடியும் அவர் பல வருடங்களுக்குப் பிறகு தான் வருகிருர்'' என்ருர்.

கண்ணனுக்கு இது விசித்திரமாகப் பட்டது. ஆனுலும் அவர் கொடுத்த பாயசத்தைக் கொஞ்சம் வாயில் விட்டுப் பார்த்தான். ஒரே எட்டிக் காய் கசப்பு! இப்படிப்பட்ட பாயசத்தைச் சாப்பிட்ட பின் யார்தான் மறுபடியும் அந்த வீட்டிற்குள் நுழைவார்கள்?

கண்ணன் பாயசப்பாத்திரத்தைக் கீழே வைத்தவாறே "நீங்கள் சொல்வதைக் கேட்டு முதலில் நான் ஆச்சரியப்பட்டேன். ஆனுல் இப்போது தான் உங்கள் வீட்டிற்கு ஒரு முறை வந்த விருந்தாளி மறுமுறை ஏன் வருவதில்லே என்ப



தற்குக் காரணம் தெரிந்துவிட்டது நல்ல சாப்பாடு போட்ட பின் இப்படி ஒரு பாயசத்தைக் கொடுத்தால் யார் தான் இந்தப் பக்கம் தலை காட்டுவார்கள்?'' என்றான்.

உறவினரும் ''ஏன்? இந்தப் பாயசத்திற்கு என்னவாம்? என் மனைவி வந்த விருந்தாளிக்காக வென்றே தயாரிக்கும் பாயசமல்லவா இது?'' என்றார். கண்ணனும் ''நீங்கள் யாருமே இந்தப் பாயசத்தைக் குடிக்காததால் இதன் ருசி தெரியவில்லை. இதை இப்போது நீங்களே சாப்பிட்டுப் பாருங்கள்'' என்று கூறினான்.

அவர் பேசாமல் நிற்கவே கண்ணனும் ''விருந்தாளியான நான் உங்களிடம் வேண்டிக் கொள்ளும் இந்த சிறு வேலையைச் செய்யக் கூடாதா?'' என்றான். உறவினரும் அந்தப் பாயசத்தை எடுத்து ஒரு வாய் குடித்ததும் ''இது பாயசமா அல்லது எட்டிக் காய் கஷாயமா? இதனால் தான் யாரும் என் வீட்டின் பக்கம் எட்டிப் பார்ப்பதில்லையா?'' என்றார். அப்போது தான் அவருக்குத் தன் மனைவி விருந்தினர்களை அண்ட விடாமல் விரட்டும் தந்திரங்களெல்லாம் புரியலாயின.

கண்ணனும் ''இப்படியெல்லாம் நீங்கள் வீட்டிற்கு வரும் விருந்தினர்களை விசேஷ முறையில் கவனிக்காமல் சாதாரண சாப்பாடு போட்டு இருக்க இடம் கொடுத்தாலே போதும். இதுவே அவர்களுக்கு நீங்கள் செய்யும் உதவி அவர்களை உபசரிப்பதாகக் கூறி என்னென்னவோ செய்கிறீர்களே அவையெல்லாம் அவர்களுக்குத் தொல்லைகளாகவே உள்ளன. இதுதான் என் சொந்த அனுபவம் நீங்கள் இந்த இரண்டு நாட்களாக என்னை அக்கறையுடன் கவனித்துக் கொண்டதற்கு நன்றி'' எனக் கூறி உறவினரிடம் விடைபெற்றுக் கொண்டு அங்கிருந்து கிளம்பி தன் ஊருக்குச் சென்றான்.



# நம்ப முடியாதே !

**க**ந்தன் என்பவன் மாணிக்கம் என்ற மளிகை வியாபாரியின் கடையில் வேலை செய்யப் போனான். மாணிக்கமும் "கந்தா. உன்னை நான் என் கடையில் வேலைக்கு வைத்துக் கொள்கிறேன். ஆனால் நான் சொல்லும் எல்லா வேலைகளையும் நீ செய்தாக வேண்டும்" என்றான்.

கந்தன் "ஓ! செய்கிறேன்" என்றான். அப்போது மாணிக்கம் "நம் கடைக்கு அடுத்த கடையின் எஜமானன் அடிக்கடி வெளியூர் போய் விடுவான். அப்போது நீ அவன் கடையில் வேலை செய்யப் போய் அவன் சந்தேகப்படாத முறையில் சாமான்கள் சிலவற்றை எனக்கு எடுத்துக் கொடுக்க வேண்டும். இந்தத் திருட்டு வெளிப்பட்டால் என்னை நீ மாட்டி விடக் கூடாது" என்றான்.

கந்தனும் "ஓ! அப்படியே செய்கிறேன்" என்றதும் மாணிக்கம் "அப்படியானால் உனக்கு என் கடையில் வேலை இல்லை. இனிமேல் இங்கே வராதே" என்றான். "ஏன்?" என்று கந்தன் கேட்டதும் மாணிக்கம் "நீதான் திருடக் கூடத் தயாராக இருக்கிறாயே. உன்னை எப்படி நான் நம்புவது?" என்று கேட்டான்.





# பேய் போய்விட்டது!

ரங்கபுர ஜமீன்தாரர் அந்தப் பெரிய வீட்டை இளைஞர் சங்கத்திற்குக் கொடுப்பதாகக் கூறியும் யாரும் அதனை ஏற்று அதில் சங்கத்தை நடத்த முன் வரவில்லை. வீடென்னவோ பார்க்க அழகாயும் சுற்றிலும் பூஞ்செடிகளும் பழமரங்களும் கொண்டு நன்றாகத்தான் இருந்தது. ஆனால் அதில் பேய் இருப்பதாக எல்லோருமே பேசிக் கொள்கிறார்களே. எப்படி அந்த வீட்டிற்குள் நுழைவது என்றே அந்த ஊர் இளைஞர்கள் தயங்கினார்கள்.

ஜமீன்தாரருக்கு என்ன செய்வது என்றே தெரியவில்லை. நல்ல காரியத்திற்காக அந்த வீட்டைக் கொடுக்க முன் வந்தால் இளைஞர்கள் ஏற்க மறுக்கிறார்களே. அந்த சேகர் செய்த வேலை இது. ஆறு வருடங்களுக்கு முன் ஜமீன்தாரரிடம் ஒருவன் வந்து ''என் பெயர். சேகர் உங்கள் வீட்டிற்குப் பக்கத்தில் காலியாகக் கிடக்கும் இடத்தை எனக்குக் கொடுங்கள். அதில் வீடு கட்டிக் கொண்டு இருக்கிறேன். மாதாமாதம் வாடகையும் கொடுக்கிறேன். அப்படிக் கொடுக்காவிட்டால் என்னை வீட்டை விட்டு விரட்டி விடுங்கள்'' என்றான்.

ஜமீன்தாரரும் வாடகையென ஒரு குறிப்பிட்ட தொகையைக் கூறி நிலத்தை அவனிடம் ஒப்படைத்தார். சேகரும் அதில் அழகிய மாளிகையைக் கட்டி பூச்செடிகள், பழமரங்கள் முதலியவற்றை வைத்து வளர்த்தான். ஆனால் ஏனோ அவன் தன்னந்தனியனாகவே இருந்தான். அவனைப் பார்க்க அவனது உறவினர்கள் யாருமே வரவில்லை. அவனும் தன் உற

இந்திரஜால வித்தையாளர் ஏ. சி. சர்க்கார்

வினர்களைக் காண எந்த ஊருக்கும் செல்ல வில்லை. அது மட்டுமல்ல யாரிடமும் அவன் எவ்விதத் தொடர்பும் கொண்டிருக்கவில்லை. அவன் மாளிகைக்குள் யாருமே போனதும் இல்லை.

ஜமீன்தாரருக்கு இது வியப்பையை அளித்தாலும் சேகர் மாதாமாதம் ஒழுங்காக வாடகையைக் கொடுத்து வந்தான். ஆறு மாதங்களுக்கு முன்பு ஒரு நாள் மாதக் கடைசி நாளன்று சேகர் வாடகை கொடுக்க வராமல் போகவே ஜமீன்தாரர் ஆச்சரியப்பட்டு இரண்டு மூன்று நாட்கள் காத்தும் பார்த்தார். அப்போதும் அவன் வராது போகவே அவன் வீட்டிற்கு ஆட்களை அனுப்பினர். அங்கு போனவர்கள் உரக்கக் கூப்பிட்டும் சேகர் வரவில்லை. கதவு தாளிடப்படவும் இல்லை. அவர்கள் உள்ளே சென்று பார்த்த போது எல்லா சாமான்களும் அவை அவை இருக்க வேண்டிய இடத்திலேயே இருந்தன. ஆனல் சேகரைத்தான் காணேம்.

இத்தகவலை ஜமீன்தாரரிடம் அவர்கள் சொன்னர்கள். சாயந்திரம்வரை பார்த்து விட்டு அவர்கள் அந்த வீட்டின் கதவை மூடிப் பூட்டி சாவியை ஜமீன்தாரரிடமே கொடுத்தார்கள். நாட்கள் பல ஓடி மாதங்களும் கழிந்தன. சேகர்



வரவே இல்லை. எங்கே போனன் என்றும் தெரியவில்லை.

ஊராரோ சேகரை பேய் விழுங்கி விட்டது என்றூர்கள். அதனல் அந்த வீட்டுப் பக்கமே போகவும் பயப்பட்டார்கள். ஏதோ ஒரு பேய் அவனைப் பிடித்து விழுங்கி விட்டதாக எல்லோரும் பேசிக் கொள்ளலானர்கள். ஆனல் உண்மையில் சேகர் என்ன ஆனன் தெரியுமா?

சேகர் என்பது அவனது உண்மையான பெயரல்ல. அவன் பெயர் கருப்பன். அவன் வேறொரு மாவட்டத்தில் திருடர் கூட்டத்தோடு சேர்ந்து இருந்தவன். அவர்கள் ஒரு முறை ஒரு ஜமீன்



தாரர் வீட்டைக் கொள்ளையடித்து பணத்தையெல்லாம் மூட்டை கட்டி கருப்பனிடம் கொடுத்து தம் மறைவிடத்திற்கு எடுத்துச் செல்லும்படிக் கூறினார்கள். கருப்பன் அப்படிச் செய்யாமல் அந்தப் பணத்தோடு அந்தப் பகுதியை விட்டே ரங்கபுரத்திற்கு யார் கண்ணிலும் படாமல் வந்து விட்டான். அந்தப் பணத்தை வைத்துக் கொண்டு அவன் சேகர் என்ற பெயரில் அந்த வீட்டில் தனியாக இருந்து வந்தான்.

அந்தத் திருடர் கூட்டம் கை கட்டிக் கொண்டா இருக்கும்? அங்கும் இங்கும் தேடிப் பார்த்து முடிவில் கருப்பன் சேகர் என்ற பெயரில் இருப்பதைத் தெரிந்து கொண்டு விட்டது. ஒரு நாள் இரவில் அவர்கள் திடீரென சேகரின் வீட்டில் புகுந்து அவனையும் அவனது பணப் பெட்டியையும் தூக்கிக் கொண்டு போய் விட்டார்கள். ஆனால் அந்தக் கூட்டமே இரண்டொரு நாட்களில் போலீசாரிடம் அகப்பட்டுக் கொண்டு விட்டது. கருப்பன் உட்பட எல்லாத் திருடர்களுக்கும் நீண்ட காலசிறைவாச தண்டனை கிடைத்தது.

ரங்கபுரத்திற்கு விடுமுறையின் போது வந்த கல்லூரி மாணவன் சுந்தர் ஜமீன்தாரர் ஒரு வீட்டைக் கொடுக்க முன் வந்தும் அவ்வூர் இளைஞர்கள் அதனை ஏற்காமல் இருக்கிறார்களே என்று மனம் வருந்தினான். அவனுக்குப் பேய் பிசாசுகளிலெல்லாம் நம்பிக்கை கிடையாது. ஆனால் கிராமத்தவருடன் விவாதிப்பதில் பயனில்லை என்பதும் அவனுக்கு நன்கு தெரியும்.

இதற்கு என்ன செய்வது என யோசித்து அவ்வூரில் முற்போக்கு நோக்குடைய இளைஞனை குமார் என்பவனை அழைத்து ''அந்த மாளிகையில் போய் இருக்க வழி செய்யலாமா?'' என்று கேட்டான். குமாரும் ''பேய் அந்த மாளிகையிலிருந்து ஓடி விட்டதாக ஊரார் நம்பினால்

போதும்'' எனவே சுந்தர் அதற்கு ஒரு வழி செய்வதாகக் கூறினன்.

இரண்டு நாட்களுக்குப் பிறகு சுந்தர் பட்டணத்திலிருந்து பெயர் பெற்ற மந்திரவாதி ஒருவனை அழைத்து வந்தான். அவனது சடைகளும், சிவந்த பட்டாடையும் அவனது தோற்றத்தைச் சற்று பயங்கரமாகத் தோன்றச் செய்தது.

அவன் பேய் மாளிகையிலிருந்து பேயை விரட்ட வந்திருப்பதாக அறிவிக்கப்பட்டது. சேகர் வசித்த மாளிகையை நன்கு அலம்பி கோலம் போட்டார்கள். மாவிலைத் தோரணம் கட்டப்பட்டது. வீட்டினுள் சாம்பிராணிப் புகை போடப்பட்டது. அந்த மந்திரவாதி அம்மாளிகைக்கு வந்தவர்களைப் பார்த்து ''இங்கு ஒரு பேய் தான் உள்ளது. நான் அதனைத் திருப்திப்படுத்தி இந்த ஊரை விட்டே விரட்டி விடுகிறேன். இதோ இந்த பாட்டிலில் பிடித்து அடைத்துக் கொண்டு போய் எறிந்து விடுகிறேன். கவலைப் படாதீர்கள்'' என்ருன்.

மந்திரவாதி ஒரு பெரிய அகல வாய் கொண்ட பாட்டிலை எடுத்து வைத்தான். அதன் பக்கத்தில் அதன் வாயில் சரியாக அடைத்துக் கொள்ளக் கூடிய வாழைப் பழம் ஒன்று இருந்தது.

மந்திரவாதி சில காகிதங்களை எடுத்து அவற்றில் எழுதப்பட்ட மந்திரங்களைப் படித்து அவற்றை பாட்டிலினுள்போட்டான். அதன்



மீது கொஞ்சம் நெய்யைத் தெளித்தான். பிறகு அதில் நெருப்பு மூட்டி சட்டென வாழைப்பழத்தைக் கொஞ்சம் உரித்து அப்படியே பாட்டிலின் வாயில் துருத்தினன். பிறகு மந்திரங்களை உச்சரிக்கலானன்.

அப்போது பாட்டிலில் காகிதம் எரிந்து அணைந்து விட்டது. வாழைப்பழம் மெதுவாக பாட்டிலினுள் தானே இறங்கலாயிற்று. அதன் தோலும் தானே உரிந்து கொண்டே போயிற்று. இதைக் கண்டு பேய்தான் வாழைப் பழத்தை இழுக்கிறது என நினைத்தனர். பழம் முழுவதும் பாட்டிலுள் போக தோல் வெளியே விழுந்து விட்டது. மந்திரவாதியும் சட்டென பாட்டிலின் வாயை மூடியால் திருகி மூடி விட்டான்.

அவர் ''பேய் இந்த பாட்டிலுக்குள் வந்து விட்டது. இனி அது இந்த வீட்டில் இல்லை'' எனக் கூறியவாறே பாட்டிலுடன் வெளியே போய் விட்டான். அப்போதே அந்த மாளிகையில் இளைஞர் சங்கம் ஆரம்பிக்கப்பட்டது. ஜமீன்தாரரே கூட்டத்திற்குத் தலைமை தாங்கி அந்த மாளிகையில் சங்கத்தை ஆரம்பித்து வைத்தார். எல்லோரும் பேய் போய் விட்டது என்றும் மந்திரவாதி அதை பாட்டிலில் அடைத்து விட்டானென்றும் நம்பினர்கள்.

சுந்தரும் அவனது நண்பன் மந்திரவாதியும் செய்த சிறு வேலை தான் இப்படி ஊராரை நம்ப வைத்தது. பாட்டிலில் காகிதம் எரிய அதில் காற்று இல்லாமல் போயிற்று. வாழைப்பழத்தை வைத்து பாட்டிலை மூடவே உள்ளே ஏற்பட்ட சூனிய இடத்தில் புகவெளியே உள்ள காற்று வாழைப்பழத்தை அமுக்கியது. அதனல் வாழைப்பழம் உள்ளே போக தோல் உரிந்து கீழே விழுந்தது.






அயோத்திக்குப் போகும் வழியிலுள்ள வால்மீகி ஆசிரமத்தில் அனுமார் இறங்கினுர். அவர் வால்மீகி முனிவரை வணங்கி ''தவசிரேஷ்டரே. ஏன் இப்படியெல்லாம் நடந்து விட்டது'' என்று கேட்டார்.

வால்மீகி முனிவரும் புன்னகை பூத்தவராய் ''ஆட்சி என்பது எளிதல்லவே. பலரையும் திருப்திப் படுத்த அரசன் பல தியாகங்களைச் செய்தாக வேண்டும். அதிகாரிகளின் கண் மூடித்தனமான செயல்கள் அரசனையே பாதிக்கும். வதந்தி வெகு வேகமாகப் பரவி விடும். ஆனுல் அது பொய் என மக்கள் உணரும்படிச் செய்ய அரசன் எவ்வளவு கஷ்டங்களுக்கும் தொல்லைகளுக்கும் ஆளாக வேண்டும். இதெல்லாம் உனக்குத் தெரிந்த விஷயங்களே'' என்றார்.

அனுமார் அந்த ஆசிரமத்தில் சீதை இருந்த இடத்தைக் கண்டார். லவனும் குசனும் அம்புகளை வைக்கும் இடத்தைப் பார்த்தார். அந்த இடங்களைக் கையால் தொட்டு கண்களில் ஒத்திக் கொண்டு அவர் அயோத்திக்குக் கிளம்பினுர்.

அயோத்தியில் அரண்மனையின் பூந்தோட்டத்தில் போய் அனுமார் இறங்கினுர். அப்போது லவனும் குசனும் அம்புகளை எய்து விளையாடிக் கொண்டிருந்தார். அனுமார் வருவதைக் கண்டதும் அவர்கள் ''யாரப்பா நீ? அனு



''நீதான் அனுமான் என நிரூபித் துக் காட்டிஞல் இங்கிருந்து போக அனுமதிக்கிறோம். அப்படிச் செய்ய முடியுமா?'' என்று கேட்டான்.

அனுமாரும் அவ்வாறே செய்வதாகக் கூறி முதலில் தன் உருவைப் பெரிதாக்கி அவர்கள் இருவரையும் தன் முதுகின் மீது உட்கார வைத்துக் கொண்டு ஆகாய மார்க்கமாய் அயோத்தி முழுவதும் சுற்றி வந்தார். பின்னர் தனது விசுவரூபத்தை அவர்களுக்குக் காட்டினர். அதன் பிறகு தன் வாலைவளர்த்து சுற்றிச் சுற்றி உயர்ந்த மணை போலாக்கி அதன் மீது அமர்ந்தார்.

இதையெல்லாம் கண்ட லவனும் குசனும் மகிழ்ந்து போய் ''அனுமாரே, சிறுவர்களாகிய நாங்கள் வீணுகச் சந்தேகித்து விட்டோம். ஆனல் உங்களது பெருமையைக் கண்ணுரக் கண்டோம். எங்களது துடுக்குத்தனத்தை மன்னித்து விடுங்கள்'' எனக் கூறினர்கள்.

அனுமாரும் ''உங்கள் விருப்பத்தையெல்லாம் நிறைவேற்றினேன். அதுவே எனக்கு மிகவும் திருப்தியாகும்'' என்ருர். லவனும் குசனும் அனுமாரின் இருகைகளையும் பிடித்துக் கொள்ள அவர்கள் இராமரைக் காணச் சென்ருர்கள். இராமர் அனுமாரைக் கண்ட

மாரைப் போல வேஷம் போட்டுக் கொண்டு வந்திருக்கிருயே. உண்மையைச் சொல்'' என்று கேட்டார்கள்.

அனுமாரும் அவர்கள் இருவரைப் பார்த்ததும் இராமரையும் சீதையையும் கண்டது போல மகிழ்ந்து ''நான்தான் அனுமான். இராமபிரானைக் காணவே இங்கு வந்தேன்'' என்ருர்.

லவனே ''நான் நம்பமாட்டேன். மானைப் போல வேஷம் போட்ட மாரீசனுக்கு நீ என்ன சொந்தம்? சொல்'' என்று வில்லில் அம்பை ஏற்றியவாறே கேட்டான். குசனே அவனை அமைதியாக இருக்கச் சொல்லி விட்டு

துமே கண்ணீர் வடிக்கலானார். அவரால் பேச முடியவில்லை. அனுமாரும் ''எம்பிரானே. நீங்களும் சாதாரண மக்களைப் போல துக்கம் மேலிட்டுக் கண்ணீர் வடிக்கிறீர்களே. ஆட்சி என்பது முள்ளின் மீது அமர்ந்திருப்பது போல என்பதைத் தாங்களே நன்கு அறிவீர்கள். எது எப்படி நடக்க வேண்டும் என்பது இராமராஜ்யத்தைப் பார்த்தால் தெரியும் என்று எக்காலத்திலும் யாரும் சொல்லும்படி நடந்து கொண்டிருக்கிறீர்கள். உங்களது ஒவ்வொரு செயலிலும் பொருள் இருக்கிறது. அதனை புரிந்து கொள்ளவும் தனித்திறமை வேண்டும்'' என்றார்.

இராமரும் ''அனுமானே, உன்னைப் பார்த்ததும் உன் பேச்சுக்களைக் கேட்டதும் என் மனம் மகிழ்கிறது. சீதை இல்லையே என்ற துயரம் ஒரு புறம், இந்த அசுவமேதயாகம் நிறைவேற வேண்டுமே என்ற கவலை மறுபுறம். இப்போது யாகக்குதிரை மணிப்புரப் பகுதியில் உள்ளது. என் மூன்று தம்பிகளும் உடன் போயிருக்கிறார்கள். நீயும் அதனைப் பார்த்துக் கொள். அதற்காகத்தான் உன்னை வரச் சொல்லி தகவல் அனுப்பினேன்'' என்றார்.

இராமர் கூறியபடியே செய்வதாகக் கூறி அனுமார் தன் கதை



யைத் தோளின் மீது வைத்துக் கொண்டு 'விர்'ரென ஆகாய மார்க்கமாகச் செல்லலானார்.

அவர் வழியில் ஒரு காட்டில் ஒரு ராட்சஸனும் ஒரு ராட்சஸியும் அட்டகாசமாகக் கத்திக் கொண்டும் அங்கும் இங்கும் ஓடி விளையாடிக் கொண்டும் இருப்பதைக் கண்டார். அதைக் கண்டு ஏதோ சந்தேகம் கொண்டவராய் அவர் உருவை மிகவும் சிறிதாக்கிக் கொண்டு அந்த இருவரும் இருந்த இடத்தருகே போய் இறங்கி ஒரு மரத்தின் மீது உட்கார்ந்து கொண்டார்.

அவர்கள் இருவரும் ஆடிப்பாடி களைத்துப் போனதும் அந்த மரத்



தடியே வந்து உட்கார்ந்தார்கள். அவர்கள் இருவரும் பேச ஆரம்பிக்கவே அனுமார் அதனைக் கேட்கலானார்.

''எதிரி கொஞ்சங் கூட மிஞ்சக் கூடாது. அவனைப் பூண்டோடு ஒழித்து விடவேண்டும். இல்லாவிட்டால் ஆபத்துதான். இதோ நாம் இருக்கிறோமே. நம் சகோதரர்களையெல்லாம் இந்த இராமன் ஒழித்தான். அதற்கு நாம் பழிக்குப்பழி வாங்கியே தீர வேண்டும் கராளகண்டா! அன்றிரவு நீ வண்ணானைப் போல பிரமாதமாக நடித்தாய்! உரத்த குரலில் எப்படிக் கத்தினாய்!'' என்று அந்த ராட்சஸி கூறினாள்.

அதற்கு ராட்சஸன் ''நீ மட்டும் குறைந்தா போய்விட்டாய், சூர்ப்பணகையே? வாயாடி வண்ணாத்தி போல பிரமாதமாகப் பேசி ஜமாய்த்து விட்டாயே'' என்றான்.

இந்த கராளகண்டன் சதகண்ட ராவணனின் தம்பி. போர்க்களத்திலிருந்து தப்பி ஓடி வந்தவன். ராட்சஸர்களை ஒழித்த இராமனையும் சீதையையும் பழிக்குப் பழி வாங்குவது என அவன் தீர்மானித்துக் கொண்டு ஒரு சலவைத் தொழிலாளியின் வேடத்தில் அயோத்திக்குச் சென்றான். இராவணனின் தங்கையான சூர்ப்பணகையும் அதே சமயம் வண்ணாத்தி போல உருமாறி இராமர் மீது வஞ்சம் தீர்த்துக் கொள்ள அயோத்திக்குச் சென்றாள். இவர்கள் சந்தித்த விதமே விசித்திரமானது.

அயோத்திக்குத் தனித்தனியே வந்த இவர்கள் தாங்கள் அடித்துக் கொன்று சாப்பிட யாராவது மனிதன் கிடைப்பானா என்று பார்க்கலானார்கள். வண்ணானாக வந்த கராளகண்டனின் பார்வையில் வண்ணாத்தியாக வந்து திரிந்த சூர்ப்பணகை தென்பட்டாள். சரியான ஆகாரம் என அவன் அவளைத் தொடர்ந்து சென்றான்.

சூர்ப்பணகையும் தன் பின்னால் வரும் வண்ணானைக் கண்டு ''ஆகா. இவனைப் பிடித்து விழுங்கி என்

பசியைப் போக்கிக் கொள்கிறேன்" என எண்ணினாள். யாருமில்லாத இடத்தில் அவள் சட்டென அவனைப் பிடித்துக் கொண்டு தன் சுய உருவைக் காட்டி விழுங்கப் போனாள்.

அப்போது கராளகண்டன் "ஓ! நீ ராட்சஸியா? யாரோ மானிடப் பெண் என்றல்லவா எண்ணி விட்டேன்" என்று தன் சுய உருவத்தை எடுத்துக் காட்டினான். அவனும் ராட்சஸன் என்பதைக் கண்ட சூர்ப்பணகை "அடாடா! இருவரும் ஒருவரை மற்றவர் மானிடப் பிறவி என எண்ணி ஏமாந்து விட்டோம்" என்றாள். அதன் பிறகே இருவரும் அந்தக் கபட நாடகம் ஆடி இரவோடு இரவாக அயோத்தியை விட்டு ஓடி காட்டிற்குச் சென்றார்கள்.

கராளகண்டன் "நல்ல வேளையாக நாம் அயோத்தியில் இருந்த போது அனுமார் அங்கே இருக்கவில்லை. அவர் மட்டும் இருந்திருந்தால் நம் ராட்சஸர்கள் போன இடத்திற்கே நம் இருவரையும் அனுப்பி இருப்பார்" என்றான்.

சூர்ப்பணகையும் "அந்த அனுமானின் பேச்சை எடுக்காதே. அவனை நினைத்தாலே 'பகீர்' என்று வயிறு எரிகிறது" என்றாள்.

கராளகண்டனும் "ஆமாம். இப்படி ஊரைக் கொளுத்தியவனை



என்ன வேண்டுமானாலும் செய்யலாம்" என்றான்.

சூர்ப்பணகையும் "இப்படி வீராதி வீரனைப் போலப் பேசும் நீ ஏன் போர்க்களத்தை விட்டு ஓடிப் போனாய்?" என்று கேட்டாள்.

"அப்படி ஓடினதால் தானே பழி வாங்க மிஞ்சினேன். அது மட்டுமா. அதிரூபசுந்தரியான நீயும் எனக்குக் கிடைத்திருக்கிறாயே" என்றான் கராளகண்டன்.

"ஏய். என் அழகிற்கு என்ன குறைச்சலாம்? கொஞ்சம் நீளமாக இருந்த மூக்கையும் முறம் போலிருந்த காதுகளையும் தான் அந்த லட்சுமணன் அறுத்து சரி செய்து விட்டானே. நாமும் இப்



போது பழிக்கு பழி வாங்கி விட்டோம். இனி எங்கேயாவது போய் இருப்போம்'' என்றாள்.

கராளகண்டன் ''அதற்கு முன் இன்னும் ஒரு வேலை பாக்கி இருக்கிறது. அந்த இராமன் அசுவமேத யாகம் செய்து ஒரு குதிரையை நாடெங்கும் திரிய விட்டிருக்கிறானே. அதைப் பிடித்துக் கொண்டு போய் விட வேண்டும்'' என்றான்.

''ஓ! பேஷ். இரண்டு பேருமாக அதன் மீது உட்கார்ந்து சவாரி செய்யலாம்'' என்றாள் சூர்ப்பணகை. கராளகண்டனோ ''அதைப் பிடிப்பது சவாரி செய்வதற்காக அல்ல. கொன்று விடுவதற்காகத்தான்'' என்றான். சூர்ப்பணகையும் ''ஓ! கொன்றால் நன்றாகச் சாப்பிடலாம். அதுவும் சரிதான்'' என்றாள். கராளகண்டனோ ''எப்போதும் சாப்பிடுவது பற்றித்தானா உன் நினைப்பு? அந்தக் குதிரை ஒழிந்து விட்டால் இராமன் செய்யும் யாகம் நிறைவு பெறாது. சீதை இல்லாததால் பாதி உயிரே போனது போலுள்ள இராமன் தான் செய்யும் யாகம் நிறைவு பெறாததால் உயிரையே விட்டு விடுவான். எப்படி என் திட்டம்?'' என்று கேட்டான்.

சூர்ப்பணகையும் ''அருமையான திட்டம். உம் இப்போதே கிளம்பு. அந்தக் குதிரையைப் பிடித்துக் கொன்று விடலாம்'' என்றாள். இதே சமயம் அனுமார் மரக்கிளையைப் பிடித்து உலுக்கினார். உலர்ந்த குச்சிகளும் இலைகளும் அந்த இருவர் மீதும் விழுந்தன.

''பார்த்தாயா மலர் மாரி பொழிகிறது!'' என்றாள். சூர்ப்பணகை ''ஐயோ. மலர் மாரியா இது! உலர்ந்து காய்ந்த இலைகள்'' என்றான். கராளகண்டன் சூர்ப்பணகையும் ''சரிசரி, கிளம்பு குதிரையைப் பிடிக்கலாம்'' என்றாள்.

அவர்கள் அடி எடுத்து வைக்கும் போது குறுக்கே அனுமாரின் வால் நீண்டு வந்து தடுத்தது. "ஐயோ,

பாம்பு'' என்று அலறினான் கராளகண்டன். சூர்ப்பணகையும் ''அட, சூரப்புலி, இது பாம்பு இல்லை வால். பார்த்தால் அனுமார் வால் மாதிரி இருக்கிறதே. நமக்கு எமபாசம் போல வந்து விட்டதே'' என்று சொன்னாள்.

''அம்மா, வாயை மூடு. அனுமானாம் அனுமான்! நீ எதைப் பார்த்தாலும் அனுமான் என்று பயந்து சாகிறாய்'' என்றான். கராளகண்டன். சூர்ப்பணகையும் ''அனுமார் வாலை நான் நன்கு அறிவேன். அது இதுதான். சந்தேகமே இல்லை'' என்றாள். அதைக் கேட்டதும் கராளன் ''அப்படியா? அனுமான் இங்கே வந்து விட்டானா?'' என்று ஓடப்பார்த்தான்.

சூர்ப்பணகையோ அவனைப் பிடித்துக் கொண்டு ''எங்கே என்னைத் தனியாக விட்டு விட்டு ஓடவா பார்க்கிறாய்?'' என்று கேட்டாள். பின்னர் திரும்பிப் பார்த்த போது பயங்கர உருவில் சற்று தூரத்தில் அனுமார் நின்று கொண்டிருந்தார்.

அவர்கள் இருவரும் ஓட முயலவே அனுமார் ஒரு பாறையை எடுத்து எறிந்தார். அதன் கீழ் சூர்ப்பணகையும் கராளகண்டனும் அகப்பட்டு நசுங்கி இறந்து போனார்கள். இப்படியாக தப்பி இருந்த அந்த இரு ராட்சஸப் பிறவிகளும் ஒழிந்தன.

அதன் பிறகு அனுமார் ஆகாய வழியாக மணிப்புரத்தை நோக்கிச் சென்றார். அழகிய சுந்தரவனத்தையும் கங்கை நதியையும் கடந்து அவர் மணிப்புர நாட்டை அணுகினார். சற்று தூரத்தில் பிரம்மபுத்திரா நதி வெள்ளி உருகி ஓடுவது போலப் பாய்ந்து கொண்டிருந்தது.

இதே சமயம் மணிப்புரத்தில் திடீரென ஒரு ஒளி மின்னியது. அனுமார் அது என்ன என்பதைக் காண சட்டென அங்கே விரைந்து சென்றார்.





# கங்கை வந்த கதை

வெகு நாட்களுக்கு முன் சகரன் என்பவன் அயோத்தியின் மன்னன் அவனுக்கு கேசினி, சுமதி என்ற இரண்டு மனைவிகள். தனக்குக் குழந்தையே இல்லாததால் சகரன் தவம் செய்ய தன் இருமனைவிகளோடு இமயமலைக்குச் சென்றான்.

இதனால் கேசினி அசமஞ்சன் என்ற மகனைப் பெற்றாள். சுமதியோ ஒரு மாமிசகோளத்தைப் பெற அது உடைந்து சுக்கலாகி அதிலிருந்து ஆயிரம் ஆண் குழந்தைகள் வந்தன.





சகரன் அசுவமேதயாகம் செய்து யாகக் குதிரையை எங்கும் சுற்றி வர அனுப்பினான். சகரன் சக்தி பெருகுவது கண்டு இந்திரன் அக் குதிரையைப் பிடித்து பாதாளலோகத்தில் கபிலரது ஆசிரமத்துள் ஒளித்து வைத்தான்.



தன் யாகக் குதிரையைத் தேடிக் கண்டு பிடிக்க சகரன் தன் ஆயிரம் மைந்தர்களை அனுப்பினான். அவர்கள் எங்கு தேடியும் குதிரையைக் கண்டு பிடிக்க முடியவில்லை.

முடிவில் அவர்கள் பூமியைக் குடைந்து பாதாள லோகத்திற்குப் போய் அங்கு யாகக் குதிரையைக் கண்டார்கள். அவர்கள் கபிலரைக் குற்றம் சாட்ட அவர் அவர்களைத் தன் பார்வையிலேயே எரித்து விட்டார்.





வெகு காலமாகியும் தன் மைந்தர்கள் வராமல் போகவே சகரன் அவர்கள் என்ன ஆனார்களென அறிந்து வர அசமஞ்சனின் மகனான அம்சுமந்தனை அனுப்பினான். அவனும் பாதாளத்திற்குப் போய் கபிலரிடம் கேட்டு யாகக் குதிரையை மீட்டு வந்தான். ஆனால் இறந்து போன ஆயிரம் மைந்தர்களை உயிர்ப்பிக்க தேவலோகத்திலிருந்து கங்கையைக் கொண்டு வர வேண்டி வந்தது.

இதனைச் செய்ய அம்சுமந்தனின் மகன் திலீபன் முயன்றான். அவனால் முடியாமல் போகவே அவனது மகனான பகீரதன் வெகு காலம் தவம் புரிந்து கங்கையைக் பூஉலகிற்குக் கொண்டுவர பிரம்மாவிடம் வரம் பெற்றான்.





ஆனால் கங்கையின் வேகத்தைத் தாங்க கூடியவர் பரமசிவன் ஒருவரே. அதனால் பகீரதன் அவரைக் குறித்து தவம் செய்து அவரது ஒத்துழைப்பையும் பெற்றான்.

இமயமலைச் சாரலில் சிவபிரான் நிற்க கங்கை தேவலோகத்திலிருந்து வேகமாக வந்து அவரது சடையில் விழுந்தாள். பிறகு வேகம் குறைய பூமியின் மீது விழுந்தாள்.





கங்கை உற்சாகத்துடன் ஓடி ஜஹ்னு முனிவரின் ஆசிரமவழியே போகும் போது அவரது ஹோமத் தீயை அணைத்தாள்.



இதனால் கோபம் கொண்ட முனிவர் கங்கை ஜலத்தையெல்லாம் எடுத்துக் குடித்து விட்டார். பகீரதன் அவரிடம் கேட்டுக் கொண்ட பிறகே அவர் தம் காதின் வழியாக கங்கையை வெளியே விட்டார். இதனால் கங்கைக்கு ஜாஹ்னவி என்ற பெயர் ஏற்பட்டது.



முடிவில் கங்கை பகீரதனின் பின்னாலேயே சென்று சமுத்திரத்திற்குப் போய் பாதாளலோகத்தில் இறங்கி சாம்பலாகிக் கிடந்த சகரனின் புதல்வர்களை உயிர்ப்பித்தாள். இப்படியாக பகீரதனின் எண்ணம் நிறைவேறியது.




கோத்ரெஜ்

அளிக்கும் புதிய

# எவிக்ஸ்

ப்ளூ டிடர்ஜெண்ட்
வில்லை



அழுக்கை அறவே அகற்றுகிறது

பளிச்சிடும் வெண்மையைத் தருகிறது

எவிக்ஸ் சக்திவாய்ந்த வெண் பொருள் ஒன்றைக் கொண்டுள்ளதால் உங்கள் துணிகள் முன்பைவிட அதிக வெண்மையையும் அதிக பளபளப்பையும் பெறுகின்றன. நீலம் போன்ற சாதனத்தை இனி நீங்கள் உபயோகிக்க வேண்டியதே இல்லை.

எவிக்ஸ் விசேஷமான முறையில் கலவை செய்யப்பட்டது. அது மற்ற டிடர்ஜெண்ட் வில்லைகளைப்போல் ஈரக் கசிவற்றது, கூழ்போல் ஆவதில்லை, பசையற்றது. ஒரே துண்டாக நிலைத்திருப்பதால் அதை இறுதிவரை உபயோகிக்க முடியும். நீங்கள் அதிகமான துணிகளைத் துவைக்கலாம், கூடுதலான சேமிப்பைப் பெறலாம்.

ஈரக்கசிவற்ற

# எவிக்ஸ்

ப்ளூ டிடர்ஜெண்ட் வில்லை

நீடித்து உழைக்கிறது

RA-G-38 REV-TAM

'நவீன ட்ரிங்க்கு—நாக்குக்கு ஷோக்கு!'







Creative Unit 3461 Tam.

குதூகல நகை கொஞ்சும் சுவை: கோல்ட் ஸ்பாட்